Registered No. M. 2330.



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

"ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானதரு வாணியை உள்நாடு"

| மலர் ௬ | ஸ்ரீமுக ஆண்டு புரட்டாசித் திங்கள் 1933 ஞு செப்டம்பர்மீ | இதழ் ௯ |
| --- | --- | --- |

## தமிழறிஞர் சிவஞானம் பிள்ளை

[பத்திராசிரியர்]

செருநல் உளஒருவன் இன்றில்லை யென்னும்
பெருமையுடைத் திவ்வுலகு—குறள்.

திருமயிலாப்பூரிலே வெள்ளியம்பல உபாத்தியாயர் என்பவர் சென்ற நூற்ருண்டின் பிற்பகுதியில் மிக்க திறமைவாய்ந்த புராணப் பிரசங்கியாகவும் தமிழ்ப் பண்டிதராகவும் திகழ்ந்தனர். அவருடைய மூத்த புதல்வர் சே. சிவஞானம் பிள்ளை யென்பார் 1871-ம் ஆண்டில் பிறந்தார். இளமையிலே இப்புதல்வர் தமது தந்தையாரிடம் தமிழ் நூல்களையும் சமய சாத்திரங்களையும் ஓதியுணர்ந்தார். இவருடன் இவர் தந்தையாரிடம் கல்வி கற்றவர் இவருடைய உயிர்த் தோழராகிய திரு. கா. நமச்சிவாய முதலியார். இவர் தந்தையின் காலத்துக்குப் பிறகு இருவரும் திருமயிலை வித்வான் சண்முகம் பிள்ளையவர்களிடத்திலும், பிறகு வித்வான் காஞ்சிபுரம் இராமசாமி நாயுடு அவர்களிடத்திலும் பல நூல்களைப் பாடங்கேட்டார்கள். பிறகு பிள்ளையவர்கள் அரசாங்கக்கல்வி இலாகாவில் எழுத்தாளராக அமர்ந்தார்கள். தமது வேலையில், மேல் அதிகாரிகள் வியக்கும்படி திறமையாகவே எப்போதும் நடந்து கொண்டார்கள். கடைசியாக 1926-ம் வருஷம் உபகாரச் சம்பளம்பெற்று வேலையிலிருந்து ஓய்வடைந்தார்கள். அதுமுதல் தமது பொழுது முழுமையும் தமிழ் நூல்களியற்றுவதிலேயே செலவழிந்தது.

பிள்ளையவர்கள் நாடோறும் சிவாலய தரிசனம், சிவபூசை முதலியன புரியும் நியமமும், சிவ சின்னங்களைத் தவறாது அணியும் நியமமும் உடையவர்கள். தஞ்சாவூர் ஜில்லாவில் அவர்கள் வேலைபார்த்தபோது சோழநாட்டுப் பாடல் பெற்ற சிவஸ்தலங்களில் ஏறக்குறைய எல்லாவற்றையும் தரிசித்தார்கள். சமயகுரவர் நால்வரது அற்புதங்கள் நிகழ்ந்த தலங்கட்குச் சென்று ஆங்காங்குள்ள சான்றுகளை நேரிற்கண்டு சேகரிப்பதில் பிள்ளையவர்கட்கு மிகுந்த ஊக்கமுண்டு.

பிள்ளையவர்கள் இயற்றிய நூல்கள் பல. அவற்றுள்சில, பெரிய பரீக்ஷைகட்குப் பாடங்களாகச் சென்னைப் பல்கலைக் கழகத்தினரால் வைக்கப்பட்டுள்ளன. தேவாரம் ஓதிய மூவர் சரித்திரங்களைப் பற்பல ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன் பிள்ளையவர்கள் வெளியிட்டுள்ளார்கள். கந்தபுராணச் சுருக்கம், பெரியபுராணக் கதைகள் முதலிய திரட்டுகளும் அவர்களால் வெளியிடப் பட்டுள.

நமது சமாஜ நிர்வாகசபை உறுப்பினராக இருந்து பிள்ளையவர்கள் புரிந்த உதவிகள் பல. அவற்றுட் சிறந்தது, அவர்கள் திருவகுப்புக்கு உரை எழுதி வந்ததேயாகும். பிள்ளையவர்கள் பல அறிஞர்களை நமது பத்திரிகைக்குக் கட்டுரைகள் எழுதச் செய்தும் பல அங்கத்தவர்களைச் சேர்த்தும் செய்த நன்றி என்றும் மறக்கற் பாலதன்று.

இத்தகைய கல்விச்சீரும் பணிச்சிறப்பும் வாய்ந்த பெரியார் தமது 63-ம் வயதின் தொடக்கத்தில் வைசூரி வாய்ப்பட்டு 19-8-33 சனிக்கிழமை பிற்பகல் 2 மணிக்கு இறைவன் திருவடி நீழலெய்தினர். இப்பெரியாரது பிரிவாற்றாமையைத் தெரிவிக்க சமாஜப் பொதுக்கூட்டம் ஒன்று, 25-8-33 மாலை சென்னை இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபையின் "குகானந்த நிலைய"த்தில், இவரது உயிர்த் தோழராகிய திரு. கா. நமச்சிவாய முதலியாரவர்கள் தலைமையிற் கூடிற்று. முதலியாரவர்கள் மேற்கூறிய வரலாற்றுக் குறிப்புக்களையும் வேறு பல விஷயங்களையும் விரிவாக எடுத்துரைத்தார்கள். பிறகு சமாஜக் காரியதரிசி, திருவாளர்கள். ச. சச்சிதானந்தம் பிள்ளை, கி. குப்புச்சாமி முதலியார், அ. கந்தசாமிபிள்ளை ஆகிய நால்வரும் பிள்ளையவர்களைப்பற்றித் தாங்களறிந்ததைக் கூறினார்கள். பிறகு தலைவரவர்களின் பிரேரணையின் பேரில் பிள்ளையவர்களது பிரிவாற்றாமையை உணர்த்தும் தீர்மானம் அனைவராலும் மௌனமாய் நின்று நிறைவேற்றப்பட்டது. வித்வான் - மறை - திருநாவுக்கரசனார் கூறிய வந்தனையுடன் கூட்டம் கலைந்தது. பிள்ளையவர்கள் ஆன்மா சாந்தி யடைவதாக!

# உண்மை உறவு

[அ. மு. பரமசிவானந்தம், அங்கம்பாக்கம்]

"எத்தாயர் எத்தந்தை எச்சுற் றத்தார்
எம்மாடு சும்மாடாம் ஏவர்நல்லார்
செத்தால் வந்துதவுவார் ஒருவரில்லை
சிறுவிறகால் தீமூட்டிச் செல்லா நிற்பர்
சித்தாய வேடத்தாய் நீடுபொன்னித்
திருவானைக் காவுடைய செல்வா என்தன்
அத்தாஉன் பொற்பாதம் அடையப்பெற்றால்
அல்லல் கண்டங் கடியேன் என்செய்கேனே?'

என நாவுக்கரசு நவின்றவாறு நானிலத்தே பிறவியெடுத்த யாருக்காவது தாய்தந்தையர் உண்மையில் உளரோ? ஒரு தாய்வயிற்றிற் பிறந்தால் அவள் எத்துணைக்காலம் தாயாகி நிற்பாள்? 'எனக்குத் தாயாகியாள் என்னை ஈங்கிட்டுத், தனக்குத் தாய்நாடியே சென்றாள்' என்னும் மொழிப்படி இவ்வுலகம் தாய்க் கொண்டேகுகின்றது. இத்தகைய தாய்களெல்லாம் ஒரு சிறிய காலத்தே அழியப்படுவர். உலகிலே உலவி நிற்கும் வரையில் என் தாய், என் தந்தை, என் மனைவி, என் மைந்தன் என்று முறையிட்டுக் கொண்டு, கடைக்காலத்தே காணுதற்கும் அரிதாகிக் கழிகின்றனர்.

'தாயாரும் பெண்டிரும் சுற்றமும் கைவிட்டுத் தாழ்ந்திடுநாள்
நீயார் நானார் எனப் பகர்வர்'

என்று பட்டினத்தடிகள் பகர்ந்தவாறு பொல்லாப்புவியில் எல்லாம் உள்ள வரையிற்றான் நல்லாராய்த் திரியலாம். தன்னையே இன்னானென்றும், தான் யாருடைமை என்றும் அறியாத ஒருவன் மற்றவரைக் கொண்டு மாய்வது என்னமடமை. 'நானார் என்னுள்ளமார் ஞானங்களார் என்னை யாரறிவார் வானோர் பிரானென்னை ஆண்டிலனேல்' என்ற மணிவாசகரின் மறைமொழி யானது இத்தன்மையை இனிமையாக வெளிப்படுத்தும்.

'அத்தமும் வாழ்வும் அகத்துமட்டே விழியம்பொழுக
மெய்த்தன மாதரும் வீதிமட்டே விம்மிவிம்மிஇரு
கைத்தலை மேல்வைத்தழு மைந்தரும் சுடுகாடு மட்டே
பற்றித்தொடரும் இருவினை புண்ணிய பாவமுமே'

என்று பட்டினத்தார் கூறியவாறு ஈண்டுதோன்றும் எப்பொருளும் எந்நாளும் தொடராது. செல்வமெல்லாம் சித்திர வீடுகளிலே; மங்கையர் மயக்கம் நடு வீதிவரையாகும். மைந்தரும் மயானத்தோடே திரும்புவர். இந்த உலகப் பொருள்களெல்லாம் ஆண்டவரது தாண்டவபாதத்தைப்பற்ற இன்னல் இழைப்பனவாகும்.

இவ்வுலகம் கானல்நீர் போன்று கண்ணுக்குத் தோற்றமாகி கணப் பொழுதில் காணு தொழியும் ஒருகற்பனையே. இத்தகைய உலகையும், உலகப் பொருளையும் உண்மையென்று கொண்டு, அப்பொருள்களின்பற்றால் பல்வேறு கொடுமையியற்றி இன்னலுற்றுழலுவர் இவ்வுலக மக்கள். எவ்வுயி

ரும் பராபரன் சன்னிதியதாகும், இலங்கும் உடல் உயிரனைத்தும் ஈசன் கோயில்' என்னும் இனிய மொழியை நோக்கி ஆராயின் இம்மண் ணுலகிற் காணும் மக்கள் முதல் மற்றுள்ள எல்லாப் பொருள்களும் இறைவனாலயமென அறிந்துகொள்ளலாம். இவைகளிலிருந்து உலகிலுள்ள பொருள்களெல்லாம் உம்பர்பிரானே என உய்த்துணரலாம். இதிலிருந்து நமது உண்மையான உறவு உமையாள் கேள்வனேயாவன் என்பது நன்கு புலனாகும்.

இனி ஒரு சீவன் பல்வேறு பிறவிகளில் பிறந்து ஆண்டாண்டே பல் வேறு உறவினரை உடைத்தாயிருக்கின்றான். இதைப் பட்டினத்தடிகள்,

'அன்னை எத்தனை எத்தனை அன்னையோ
அப்பன் எத்தனை எத்தனை அப்பனோ
பின்னை எத்தனை எத்தனைப் பெண்டிரோ
பிள்ளை எத்தனை எத்தனைப் பிள்ளையோ
முன்னம் எத்தனை எத்தனை சென்மமோ
மூடனாய் அடியேனு மறிந்திலேன்
இன்னும் எத்தனை எத்தனைச் சென்மமோ
என்செய்வேன் கச்சிஏகம்ப நாதனே'

என்றும், மணிவாசகர்,

'புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்ல சுரராகி முனிவராய்த் தேவராய்
செல்லா நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்'

என்றும் கதறியுள்ளனர். இவைகளினால் நாம் பல தாய்தந்தையரை உடைத் தாயினும். ஆனால் உண்மைத் தாய்தந்தையர் யாவர்? உண்மை உறவினர் யாவர்? எல்லாமாய் அவ்விறைவன் திற்றலால் எத்தகைய உறவினரும் அப் பண்ணவனாகவே யாகின்றான். எனவே, யாவருக்கும் உண்மை உறவினன் அவனாவன்.

மாயாநிதமான உலகிற்றோன்றும் பொருள்களெல்லாம் நமக்கு உறுதுணை யாகா. இப்பொருள்களெல்லாம் தோன்றி அழியும் தன்மையன. எல்லாம் வல்ல இறைவனாது திருவடித் தாமரைகளே நமக்குப் பற்றுவன. அவ் வடித்தாமரைகளே இவ்வுலக சுற்றம் பொய்யென நீத்த புனிதற்கு உறு துணையாவன. கற்றாருடைய பாவலுக்குப் பெருமையுடையன. காதல் செய்பவருக்கு பிரகாசமாவன. வீடளிப்பன. பற்று அற்றவர்களுக்கு அரும் பொருள்களாவன.

"உற்றா ரிலாதார்க் குறுதுணை யாவன ஓதிநன்னூல்
கற்றார் பாவப் பெருமை யுடையன காதல்செய்ய
கிற்பார் தமக்குக் கிளரொளி வானகத்தான் கொடுக்கும்
அற்றார்க் கரும்பொருள் காண்க ஐயாற னடித்தலமே."

என வாக்கின் மன்னர் வரைந்திருப்பது நோக்கற்பாலது. எனவே, திரிபுர மெரித்த விரிசடைக் கடவுளின் பாதமே நமக்கு உறுதுணையாகி உண்மை இன்பத்தை உதவும் உடைமைப் பொருள். அவனே 'ஈன்றாளுமாய் எனக் கெந்தையுமாய்உடன் தோன்றினராய், மூன்றாயுலகம்படைத்துகந்தா'னவன்.

ஆணவம், காமியம், மாயை என்ற மும்மலங்கள் நம்மை மடக்கி மண், பெண், பொன் என்ற மூவாசையினால் மூடி, நம்மறிவை அவமாக்குகின்றன. இத்தகைய பொல்லாப் பிணிகளைத் தவிர்ப்பதற்கு 'நற்றுணையாவது நமச்சிவாயவே'யாகும்.

மக்களாய்ப் பிறந்த ஒவ்வொருவருக்கும், ஆண்டவனது அருமை அடிகளை அடைவதே உண்மைத் தொண்டாகும். அவ்விறைவனைக் கண் கொண்டு காண்பதும், அவன் புகழைப் புகழ்ந்து பாடுவதும் உண்மைத் தொழில்கள். உலகிற்காணும் உறவுகளெல்லாம் ஒன்றுக்கும் உதவாது ஒழிந்துவிடும்.

நமக்கு உண்மை உறவாக இருப்பவன் அங்கயற் கண்ணியை அருகிலமைத்த ஆனந்தத் தாண்டவனேயாகும். இதையே அப்பர்,

"அப்பன்நீ அம்மைநீ ஐயனும்நீ அன்புடைய மாமனும் மாமியும்நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும்நீ ஒருகுலமும் சுற்றமும் ஒருரும்நீ
துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவாய்நீ துணையாய் என்நெஞ்சந் துறப்பிப்பாய்நீ
இப்பொன்நீ இம்மணிநீ இம்முத்துநீ இறைவன்நீ ஏறூர்ந்த செல்வன்நீயே."

என்றார். எனவே, மக்களாய்ப் பிறந்தார் அடையவேண்டிய உண்மைப் பயனை ஆராயின் அப்பண்ணவனைப் பாடி அவனடியைக் காண்பதேயாகும். அவனே நமக்கு உண்மை உறவினன். அவனே தாய்! அவனே தந்தை! அவனே எல்லாம்.

"குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயிற் குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியிற் பால்வெண் ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற் பாதமும் காணப் பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே" —அப்பர்.

# அப்பரது அஞ்சாமை

[பே. கோவிந்த மூப்பனார்]

(மலர் 6. இதழ் 8. 191-ம் பக்கத் தொடர்ச்சி)

இத் தேவாரத்தில் நல்ல நாமத்தை நவின்று நான் உய்ந்தேன் என்று கூறுகிறார். கடலில் வீழ்த்தின காலத்தில் பாடிய 'சொற்றுணை' என்ற செய்யுளிலும், 'கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும் நற்றுணையாவது நமச்சிவாயவே' என்று தெரிவிக்கின்றார். இவ்வாறு கூறுவதனால் அடிகள் கடலில் அகப்பட்டுக்கொண்ட காலத்தில் நமச்சிவாய என்ற மறை மொழியைத் தமக்குத் துணையாகக் கொண்டனர் என்று அறியலாம். "கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும் நற்றுணை யாவது நமச்சிவாயவே" என்பதில் பாய்ச்சினும் என்பதிலுள்ள 'உம்' இறந்தது தழீஇய எச்சவும்மை என்று

கொண்டால், நீற்றறையில் புக்க காலத்தும், நஞ்சு உட்கொண்ட காலத்தும், யானை என்னை இடாவந்த காலத்தும், நான் நமச்சிவாய என்ற மறை மொழியையே துணையாகக்கொண்டு உய்ந்தேன், 'கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும் நமச்சிவாய' என்ற மறைமொழியே எனக்குத் துணை என்று நாவுக்கரசர் கூறுவதாகப் பொருள்படும். நீற்றறையில் அடிகள் பாடிய 'மாசில் வீணையும்' என்று தொடங்கும் பதிகத்தில்,

நமச்சி வாயவே ஞானமும் கல்வியும்
நமச்சி வாயவே நானறி விச்சையும்
நமச்சி வாயவே நாவின் றேத்துமே
நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே.

என்ற செய்யுள் காணப்படுவதாலும்,

அஞ்சிருள் காலமாலை தொடர்ச்சியை மறந்தி டாதே
அஞ்செழுத் தோதினாளும் அரனடிக் கன்ப தாகும்
வஞ்சனை பாற்சோறாக்கி வழக்கிலா அமணர் தந்த
நஞ்சமு தாக்குவித்தார் நனிபள்ளி அடிக ளாரே.

என்று கூறுவதாலும், நீற்றறையிலும், நஞ்சுண்ட காலத்திலும் அடிகள், "நமச்சிவாய" என்பதைக் கைக்கொண்டமை புலனும்.

நாவுக்கரசர் சமண சமயம் நீங்கிச் சைவசமயம் புகுந்ததை அறிந்த சமணர்கள் தமக்குப் பொறாமையால் செய்த தீமை ஒன்றன்று; பல ஆகையாலும், அப்பலவும் மக்களால் பொறுக்கக் கூடியவையல்ல வாகையாலும், அப்பொறுக்கக் கூடாதவையும் ஒரு நாளிற் செய்யப்படாமல் பலநாளிற் செய்யப்பட்டமையாலும், அப் பலநாளிலும், மறைந்து செய்யாமல், இவரைப் போன்று யார் யார் சமண சமயத்தினீங்கிச் சைவ சமயம் புகுகின்றார்களோ அவர்களுக்கும் இவருக்குக் கிடைத்த தண்டனை கிடைக்கும் என்று குடிகளுக்குத் தெரிவிக்கும் நோக்கத்தோடு குடிகள் பலரும் அறியச் செய்தமையாலும், தமக்குச் சமணர்கள் செய்த தீமைகளை உலகத்தினர் அறிவர் என்றும், அத்தீமைகளால் தமக்கு இடையூறு ஒரு சிறிதும் நேராமல் இறைவன் தம்மை ஆட்கொண்டார் என்றும், தம்மை இறைவன் ஆட்கொண்டதையும் உலகத்தினர் அறிவர் என்றும் அடிகள் சுருங்கச் சொல்லல் என்னும் நயம் பற்றிச் சுருக்கிக் கூறுகின்றார்.

"என்று கொண்டாய்என்னை எம்பெருமானினி அல்லமெனில்
சான்று கண்டாயிவ் வுலகம்"

என்பதனாலும்,

"ஊனத்தை நீக்கி உலகறிய என்னையாட் கொண்டவன்"

என்பதனாலும் அறிக.

கல்லின்மேலிருந்த அடிகளைக் கடலலைகள் திருப்பாதிரிப்புலியூருக்குச் சிறிது சிறிதாகத் தள்ளிக்கொண்டு வந்தன. அடிகள் கல்லைத் தோணியாகக் கொண்டு, கடற்கரையை அடைவதைக் கரையிலிருந்து பார்த்து ஆச்சரியம் கொண்ட மாந்தர்கள், அடிகளது அன்பின் திறமையையும், இறைவன்

அவரை ஆட்கொண்ட திறமையையும், சொல்லியும் கேட்டும், அன்பும் வியப்பும் உடையராய், தலைகளின் மேல் கைகளை வைத்து வணங்கி, கண்களினின் றும் நீர் வடித்து, மெய்ம்மயிர் பொடிப்ப விதிர் விதிர்ப்பெய்திச் சிவ சிவ என்ற பேராவத்தோடு எதிர் சென்று நாயனாரை வரவேற்றனர். கரையில் ஏறித் தம்மை யாட்கொண்ட இறைவனை நினைந்து நினைந்து நெஞ்சம் நெக் குருகி, வரவேற்ற அடியார்களைப் பன்முறை பணிந்து அவர்களோடு அயரா அன்புடன் சிவபெருமானை வணங்கத் திருப்பாதிரிப்புலியூர்த் திருக்கோயி லுக்குச் சென்றார். அங்கு இறைவனைக் கண்டு உள்ளமுருகிப் பணிந்து 'ஈன்றாளுமாய்' என்றுதொடங்கும் பதிகத்தைப் பாடி யருளுகிறார். அப்பதி கத்தின் முதல் பாட்டில் அடிகள் தம்மை இறைவன் ஆட்கொண்ட வாலாற் றையும் தமது அஞ்சாமையையும் வெளிப்படுத்துகின்றார்.

இறைவன் உலகத்துக் காட்சிப் பொருளும் இன்மைப் பொருளுமன்றி நினைப்பவர் மனத்தைக் கோயிலாகக் கொள்ளும் பொருளாதலின், அடியே னுக்கு இடர்வந்த காலத்தும் வாராத காலத்தும் அவனை நினைத்து நினைத்து மனத்திலிருத்த அவனும் அடியேன் வேண்டுகோளுக் கிரங்கி நெஞ்சைக் கோயிலாக் கொண்டான் என்பார், "மூன்று யுலகம் படைத்துகந்தான் மனத் துள்ளிருக்க வன்றான்" என்றும், குழந்தைக்கு இடுக்கண் நேர்ந்தகாலை, அத னைக் கண்டு ஆற்றாது இரக்கங்கொள்ளுந் தாய்போல அடியேனுக்குச் சமணர் களால் இடுக்கண் நேர்ந்தகாலை இறைவன் மிக்க இரக்கம் கொண்டான் என் பார், 'ஈன்றாளுமாய்' என்றும் இரங்கி வாளாவிருக்கும் தாய்போலன்றி இடுக் கணை நீக்க முயற்சிக்கும் தந்தையைப்போல அடியேனுக்கு நேர்ந்த இடுக் கணை நீக்க முயற்சித்தான் என்பார், 'எனக்குஎந்தையுமாய்' என்றும், வழியறி ந்து மெதுவாக இடுக்கணை நீக்க முயற்சிக்கும் தந்தைபோலன்றித் தம்பிக்கு வந்த இடுக்கணைத் தனக்கு வந்ததாகக்கொண்டு, குறுக்கு வழியில் விரைந்து நீக்கும் தமையனைப் போல அடியேனுக்கு நேர்ந்த இடுக்கணைக் குறுக்கு வழியில் விரைந்து நீக்கினான் என்பார் 'உடன் தோன்றினராய்' என்றும், ஈன்றாளுமாய் எனக் கெந்தையுமாயுடன் றோன்றினராயிருப்பினும் மெய்யறி வில்லாத சமணர் கண்ணுக்குத் தோன்றாமல் அவர்கள் செய்த இடையூற் றுக்குக் கெல்லாம் அடியேனுக்குத் துணையாக இருந்து அவற்றை நீக்கினான் என்பார் 'தோன்றாத் துணையாயிருந்தனன் தன்னடியோங்களுக்கே' என்றும் கூறுதல் காண்க.

மக்களுக்கு வரும் துன்பங்கள் தன்னைப் பற்றிவருவனவும் பிறவுயிர் களைப் பற்றிவருவனவும் தெய்வத்தைப் பற்றிவருவனவும் என மூவகை யாம். அடிகளுக்குத் தன்னைப் பற்றிவந்த துன்பம் சூலை நோயாம். பிற வுயிர்களைப் பற்றி வந்த துன்பங்கள் சமணர்கள் நீற்றறையில் புகுத்தியது, நஞ்சுண்பித்தது, யானையைஇடறுவித்தது,கற்றூணைப் பூட்டிக்கடலில் செலுத் தியது என்பனவாம். சூலை நோயின் கொடுமையை அடிகள் துய்த்தவராத லின், அதனைப் போன்ற கொடிய நோய்களோ அதனினும் கொடிய நோய் களோ இனித் தம்மை அடையா என்றும், சமணர்கள் செய்த கொடுமைகளை அடிகள் நுகர்ந்தவராகலின் அவற்றைப் போன்ற கொடுமைகளோ அவற்றி

னும் கொடிய கொடுமைகளோ இனித்தம்மை அடையா என்றும் அடிகள் தெளிவு கொள்கிறார். தெளிவு கொள்வதற்குக் காரணம் சூலை நோய் பற்றிய காலத்தும், சமணர்களால் இன்னல் நேர்ந்த காலத்தும், தம் வேண்டுகோளுக்கிரங்கி இறைவன் தம் உள்ளத்தை இடமாகக்கொண்டு, தாம் வருந்தா வண்ணம் அவற்றை நீக்கினான், சூலை நோய்க்குப் பின் தமக்கு வேறு நோய் வாராமையாலும், கல்லோடு கட்டிக் கடலில் போடுவதே இறுதித் தண்டனை என்று முடிவு செய்து சமணர்கள் அதனைச் செய்தார்களாதலின் அவர்களால் வேறு இடையூறு நேராமையாலும், வேறு பகைவர்கள் தமக்கு இன்மையாலும் இனி அருவினையும் அவலமும் நேரா, நேரினும் முன்னர்க் காப்பாற்றிய கடவுள் பின்னரும் காப்பாற்றுவான் என்னும் துணிவேயாம். தன்னைப் பற்றி வரும் துன்பத்திற்கும் பிறவுயிர்களைப்பற்றி வருவனவற்றிற்கும் அஞ்சாமை பிறக்கவே நாயனார் தெய்வத்தைப்பற்றி வருவனவற்றிற்கும் அஞ்சுவதில்லை என்று பறை சாற்றுகின்றார்; வல்லார், பொல்லார், செல்வர், நல்லவர் என்று எண்ணாமல் எல்லாரையும் ஒப்ப இறப்பிக்கும் எமனும் இறைவனாகிய சிவபெருமான் கட்டளைக்கு அடங்கி நடத்தலின்,

“விடையான் விரும்பி என்னுள்ளத் திருந்தான் இனிநமக்கிங்கு
அடையா அவலம் அருவினைசாரா நமனை அஞ்சோம்”

என்று அடிகள் கூறும் செய்யுட்பகுதியின் கருத்தினை நோக்குக.

நாயனாரது அஞ்சாமை மேற்கூறிய அளவோடு நிற்கவில்லை. அவரது அஞ்சாமை அளவு கடந்து நிற்கிறது. அவரைப் போன்று அஞ்சாமையைப் பற்றிப் பாடிய புலவர்களுமில்லை. அவரைப் போன்று அஞ்சாமையைக் கொண்ட வீரரும் இல்லை என்றே கூறலாம். வானம், நிலம் மலை, கடல் முதலியன நடுக்கங் கொள்ளினும் அஞ்சுவதில்லை என்று ஒரு செய்யுளிற் கூறுகிறார். தத்தம் நிலையிற்றிரியாமல் இயங்கும் உலகங்களில், மண்ணுலகம் தன்னிலை குலைந்து பாதலம் செல்ல, அதனைச் சூழ்ந்திருக்கும் கடல் தன்னிலை தவறி அதனை அழிக்க விண்ணுலகங்கள் தத்தம் இடம் நீங்கி வெவ்வேறு திசைக்குச் சென்று கெட, ஞாயிறும் திங்களும் நிலை திரிந்து விழ ஒரு வழி எப்படியும் நெஞ்சமே அஞ்சற்க என்று மற்றொரு செய்யுளிலும் அடிகள் கூறுகிறார். அவை பின் வருமாறு.

“வானந் துளங்கிலென் மண்கம்ப மாகிலென் மால்வரையும்
தானந் துளங்கித் தலைதடு மாறிலென் தண்கடலும்
மீனம் படிலென் விரிசுடர் வீழிலென் வேலைநஞ் சுண்டு
ஊன மொன்றில்லா ஒருவனுக் காட்பட்ட உத்தமர்க்கே.”

“மண்பா தலம்புக்கு மால்கடல் மூடிமற் றேழுலகும்
விண்பால் திசைகெட்டு இருசுடர் வீழினும் அஞ்சல்நெஞ்சே
திண்பால் நமக்கொன்று கண்டோம் திருப்பாதிரிப் புலியூர்க்
கண்பாவு நெற்றிக் கடவுட் சுடரான் கழலிணையே.”

# திருஞானசம்பந்தர் பதிக அமைப்பு

(மலர் 6. இதழ் 8. 192-ம் பக்கத் தொடர்ச்சி)

## 5. திருஞானசம்பந்தர் பதிக முப்பாகம்

திருஞானசம்பந்தர் பதிகத்திய 11-ம் செய்யுள் திருக்கடைக்காப்பு என்னும் பதிக பாகமெனக் கண்டோம். 8, 9, 10-ம் செய்யுட்கள் முறையே இராவணன் கயிலையில் சிதைவுண்டு சிவபெருமான் அருள்பெற்றதும், பிரமன், மால் இறைவன் அடிமுடி தேடியதும், சமணர் சாக்கியர் வலையில் மாணவர் சிக்காதிருக்க வேண்டுமென்னும் எச்சரிப்புமாகிய மூன்று விஷயங்கள் பெற்றனவாம். 8-ம் பாசுரம் இராவணனைக் குறித்துப் பாடவேண்டிய காரணம் என்னவென்று யோசிப்போமாயின், திருநாவுக்கரசு நாயனர் தமது பதிகங்களின் 10-ம் செய்யுளில் இராவணனைக் குறித்துப் பாடியது யாது காரணமோ, அதுவே சம்பந்தரும் கருதிப் பாடினரென்று நாம் அனுமானிக்கலாகும். அக்காரணம் சேக்கிழார் திருநின்ற சருக்கத்தில், அப்பர் கருத்தை,

" அத்தன்மையனுப இராவணனுக் கருளுங்கருணைத் திறமாயவதன்
மெய்த்தன்மை யறிந்து துதிப்பதுவே மேற்கொண்டு வணங்கினர் மெய்யுறவே "

என்று வெளியிட்டார். அதனை அப்பர்,

" தருக்கு வெற்பது தாங்கிய வீங்குதோள் அரக்க னுருட லாங்கோர் விரலினல்
நெரித்து நீலக் குடியரன் பின்னையும் இரக்க மாயருள் செய்தன னென்பரே "
—திருநீலக்குடி - திருக்குறுந் தொகை. 10.

என்பர் ; புகலி வேந்தரும்,

" பரக்கும் பெருமை இலங்கை யென்னும் பதியிற் பொலிவாய
அரக்கர்க் கிறைவன் முடியுந் தோளும் அணியார் விரல்தன்னல்
நெருக்கி யடர்த்து நிமலா போற்றி என்று நின்றேத்த
இரக்கம் புரிந்தார் உமையாளோடும் ஈங்கோய் மலையாரே "!

என்பர். மன்னிக்கக்கூடாத குற்றம் செய்தவனும், இறைவனைத் துதித்தால் அக்குற்றத்தினின்று நீங்கி இறைவனருள் பெறுவனென்பது இம்மேலோர் கருத்து. மற்ற சமயங்கள் மீளா நரகம் என்று ஒன்றை இத்தகைய பெருங் குற்றவாளிகளுக்கு ஏற்படுத்தி வைப்பினும், அன்பின் உருவமான சைவத்தில், அத்தகைய நரகம், சிவபெருமானைச் சிந்தித்த மாத்திரத்தில் அழியுமென்பது உணர்த்தப்படும். அக்கருத்தை நமது சைவ சமயகுரவர்களான அப்பரும், சம்பந்தரும் முறையே 10-ம் செய்யுளினும் 8-ம் செய்யுளினும் பலவாறு விளக்கினர். மீளாநரகம், மனிதனிடத்திருக்கும் ஆணவத்திற்குப் பெரியதன்று. அவ்வாணவ உருவகமே இராவணன் எனினும் தகும். அம்மலத்தைக் குறிக்க இராவணனைப் பற்றியும், காமிய சொரூபத்தைப் புலப்படுத்த அயன் அரி இவர்களையும் மாயையின் தன்மை காட்டச் சமண சாக்கியர்களையும், முறையே, 8, 9, 10-ம் பாசுரங்களில் அவர் பதிகத்தில் அமைத்தன ரென்னலாம். இவ்வாறு முத்திபெறுவதற்குக் கழுவ

வேண்டிய மும்மலங்களின் உருவகங்களை 8, 9, 10 செய்யுட்களில் அமைத்திருக்கின்றமையால், அம்மூன்றையும் மற்றொரு பாகமாகவும், எஞ்சிய ஏழு செய்யுட்களைப் பின்னு மொருபாகமாகவும் வகுத்து, ஒன்று முதல் ஏழு, எட்டுமுதல் பத்து, பதினொன்று, ஆகப் பாகங்கள் சம்பந்தர் பதிகத்தில் மூன்றென்னலாம்.

இவ்வாறு திருஞானசம்பந்தர் தமது திருப்பதிகங்களை முப்பாகமுள்ளதோர் கலையாய் எண்ணிப் பாடினாரோ வெனில், அல்லவென்று கூற இடமில்லை. ஆசுகவியாய் மேகம்போல் கவிமாரி சம்பந்தர் பொழிந்தாரெனினும், பதிகச்சீர்கள் அளவு, அடிகள் அளவு, செய்யுட் கணக்கு, விஷய அமைப்பு முதலியன வெகுசாக்கிரதையாய்க்* கண்வைத்தவராய்க் காணப்படுகின்றார். சம்பந்தர் சொற்றொடர்களைச் சுருக்கவே முடியாதென்பது யாவரும் அறிந்தவிஷயம். அச்சொற்றொடர்களினும், செய்யுளின் முதற்பாகமானவை, வயிரம்போன்ற தலையானவை. அவ்வாறு அவர் பதிக முற்றுமிருக்க ஒரு செய்யுளானது அத்துணைவன்மை பெறாது, சற்று சுருக்கக் கூடிய சொற்றொடர் தன் தலைப்பாகமாகப் பெற்றிருக்கின்றது காண்க.

ஏழு மூன்றுமோர் தலைகளுடைய னிடர்பட வடர்த்து
வேழ்வி செற்றதும் விரும்பி விருப்பவர் பல பல வுடையார்
கேழல் வெண்பிறை யன்ன கெழுமணி மிடறுநின் றிலங்க
வாழி சாந்தமு முடையார் வாழ்கொளி புத்தூ ருளாரே.

—திருவாழ்கொளி புத்தூர் - பண் - பியந்தைக் காந்தாரம் - 8.

இதில் "ஏழும் மூன்றுமோர் தலைகள்" என்னும் சொற்றொடரைப் பத்து தலைகளெனச் சுருக்கலாகாதா? ஏன் சம்பந்தர் அவ்வாறு சுருக்கவில்லை? பத்து தலையுடையவனென ஆரம்பித்திருப்பாராயின் அதற்குத் தக்கமோனை, எதுகை, சொற்கள் சீர்கள் அமையாவோ?

திருஞானசம்பந்தர் மூன்று திருமுறைகளின் 8-ம் பாசுரங்களைக் கவனித்துப் பார்ப்போமானால், பத்து என்னும் சொல்லுக்குப் பதிலாய், ஆறு நான்கு என்றாகிலும், எட்டுமிரண்டு மென்றாகிலும், ஐந்துமைந்து மென்றாகிலும், ஒன்றுமொன்பது மென்றாகிலும் ஆரம்பித்துப் பாடவில்லை. நால்வேத சாகைகளை நினைத்து ஆரம்பித்த இப்பதிகத்தில் மாத்திரம் பாடிய காரணம் யாது என உற்று நோக்கின் ஏழும் மூன்றுமாய் நின்ற கலை தன் பதிகமாதலாலும், ஏழாம் செய்யுள் முடிந்தவுடன், வேறு வகையான மூன்றுபாட வேண்டியது அவர் மனதிலிருந்ததால், அவரையும் அறியாது "ஏழும் மூன்றும்" என்று ஏழாம் செய்யுள் முடிந்தவுடன் அவர் திருவாய் மலர்ந்தருளினார். மிகவும் சிறந்த ஆசுகவியாதலால், சொன்ன சொற்றொடரை விட்டு வேறு சொல்லைத் தலையாயமைத்து வேறு செய்யுள்பாடாது, அச்சொற்றொடர்

---

* கழியுலாங்கடற் கானல்சூழ் கழுமலமமர் தொல்பதிப், பழியிலாமறை ஞான சம்பந்தனல்லதோர் பண்பினால், மொழியினாலறை யணி நல்லூர் முக்கண் மூர்த்திதன் தாள்தொழக், கெழுவினாரவர் தம்மொடேங் கேடில்வாழ்பதி பெறுவரே.

—திரு அறையணி நல்லூர் - பண் - காந்தாரம் - 11

தொடங்கிய எட்டாம் செய்யுள் பாடினரென நாம் அநுமானிக்கலாகும். ஏழும், மூன்றும் ஒன்றுமாய் நிற்கும் ஒழுங்கு பலவகைச் சித்திரக் கவிகளாக்கத் திருஞானசம்பந்தருக்குப் பயன்பட்டதாகவும் காணப்படுகின்றது.

முதற்பாகமான ஏழு செய்யுட்கள் விஷயம் இவையென இரண்டாம் பாகமான மூன்று செய்யுட்களில் காணப்படுவதுபோல் காணப்படவில்லை. எட்டாம் செய்யுளின் விஷயம் இராவணன் கைலேயில் சிதை வுண்ட கதை; ஒன்பதாம் செய்யுள் சிவபெருமான் அடிமுடி காணக்கூடாத சோதியாய் நின்ற காலேயில் அடிமுடி முறையே அரியும் அயனுந் தேடிச் சென்ற கதை; பத்தாம் செய்யுள் சமணர் சாக்கியர் தோஷங்களும் அவற்றைப் பூர்வபட்சம் செய்தலுமாய விஷயம். இவ்வாறு வெளிப்படையாய்க் காணக்கூடிய மூன்று விஷயங்கள் முறையே 8, 9, 10 ஆகிய செய்யுட்களில் அமைந்திருப்பினும், முதல் ஏழு செய்யுட்களில் அவ்வாறு விஷயங்கள் ஒரே மாதிரியாய் அமைந்திருக்கவில்லே. அவ்வாறு பிற்பகுதி ஒழுங்கமைந்தும், முற்பகுதி அவ்விதவொழுங்கமையாமலும் இருப்பது கலேயாகுமா என்று வினவின், சேக்கிழார் கூறியதுபோல் "உவமையிலாக் கலேஞானம்" பெற்ற சம்பந்தர் திருப்பதிகம், யாவரும் உவக்கத்தக்க ஒழுங்கமைந்திருக்க வேண்டுமென்றே நாம் விடைகூறல் வேண்டும். அவ்வொழுங்கு யாதென்று ஆரோய்வோமாக:—

திருஞானசம்பந்தர்8, 9, 10-ம் செய்யுட்கள் முறையே மூன்று விஷயங்களேயே குறிப்பது கண்டோம். அவ்வாறாயின், ஒரு பதிகத்தின் 8-ம் செய்யுளிற் கூறியதே மற்றொரு பதிகத்தின் எட்டாஞ் செய்யுளிற் கூறுவது கூறியது கூறலாகுமன்றோ? வேறு தலம், வேறு பதிகமாயிருப்பினும், திருஞான சம்பந்தர் ஓரிடத்தில் சொன்னதை, மறுவிடத்தில் திருப்பிச் சொல்லும் வழக்க முடையவராய்க் காணப்படவில்லே. அவர் திருக்கடைக் காப்பில் கேட்போர் பாடுவோர் அடையும் பயன் எவ்வாறு பற்பல விதமான விஷயங்களாயிருக்கின்றனவோ, அதுபோலவே, அரி அயன் அடிமுடி காணுமை, சமண சாக்கிய தோஷங்கள், இராவணன் செருக்கழிந்தமை இவற்றைச் செப்பும் கவிகளும் ஒரே தன்மையாயிராமல் பற்பல முகங்களில் காட்டப்பட்டிருக்கின்றன. அதனல் 8, 9, 10-ம் செய்யுட்கள் விஷயம் மாறுபடாத ஒரே கதையைக் குறிப்பிடினும், ஒவ்வொன்றும் பல்லாயிர அம்சங்களாக்கி, ஒவ்வொரு பதிகத்தில் இரண்டொரு அம்சமே காட்டியிருப்பதால், அவற்ருல் தொகுக்கப்பட்ட 8, 9, 10-ம் செய்யுட்களுக்குத் தக்கவாறு திருக்கடைக் காப்புச் செய்யுளில் திருப்பதிகம் பாடும் பயன் இதுவென பற்பல பலன்களேப் பற்பல விதமாய்க் காட்டினர். ஆகையால் திருக்கடைக் காப்பின் விஷயம் ஒன்றேயா யிராததுபோல், 8, 9, 10. செய்யுட்களின் விஷயமும் பற்பல விதங்களாய்த் தோற்றுகின்றன.

முதல் ஏழு செய்யுட்கள், பின்னேய நான்கு செய்யுட்களுக்குத் தக்கவாறு அமைந்திருப்பினும், அவற்றின் விஷயமும் சரித்திர அமைப்புகளும் பதிகத்திற்குப் பதிகம் முற்றும் வேருன பேதம் பெற்றிருக்கின்றன. முன்னே கூறியவாறு மனிதனுக்கு மனிதன் மனிதத்தன்மை ஒற்றுமையன்றி முகம் முற்றும் வேருயிருப்பதுபோல், இப்பதிகங்களின் முதற்பாகம்

கள் திருக்கடைக் காப்பு செப்பும் பயனுக்கு ஒப்பநிற்கும் நோக்கத்தை வெளிப்படுத்தும் ஆகையால், ஒருபதிக முதற்செய்யுள் மற்றொரு பதிகமுதற் செய்யுளுடன் ஒற்றுமை பெரும்பாலும் காட்டுவதில்லை. கீழ்வரும் உதாரணங்களை நோக்குக :—

விடையவன் விண்ணும் மண்ணுந் தொழநின்றவன் வெண்மழுவாட்
படையவன் பாய்புலித்தோ லுடைகோவணம் பல்கரந்தை
சடையவன் சாமவேதன் சசிதங்கிய சங்க வெண்தோ
டுடையவன் ஊனமில்லி உறையுமிடம் ஒற்றியூரே.

—சம்பந்தர் - திருவொற்றியூர் - பண் - பஞ்சமம் - 1.

விரையார் கொன்றையினாய்! விடமுண்ட மிடற்றினனே!
உரையார் பல்புகழால் உமைநங்கையோர் பங்குடையாய்!
திரையார் தெண்கடல்சூழ் திருவான்மியூ ருறையும்
அரையா உன்னையல்லால் அடையாதென தாதரவே.

—சம்பந்தர் - திருவான்மியூர் - பண் - கௌசிகம் - 1.

## கடவுளர் வணக்கமும் பயனும்

[ச. பொன்னுஸ்வாமிக் குருக்கள், சுதுமலை, யாழ்ப்பாணம்]

எந்தக் கடவுளை வணங்கினாலும் வணங்கலாம்; எதை வணங்கினாலும் முத்தி கிடைக்குமென்று சில தருணத்தில் நாம் எண்ணுவதுண்டு. ஆனால், உண்மை அப்படியல்ல. இந்திராதி தேவர்களென்றும் பிரமாவென்றும், விஷ்ணுவென்றும், சொல்லப்படுபவ ரொருசாரார். உருத்திர னென்றும் மகேஸ்வரனென்றும் சதாசிவனென்றும் கர்த்தாக்கள் மூவர். இதன்மேல் நிஷ்களமான சிவமொன்று, அதன்மேல் ஞானாநந்த நிலையுடைய சிவமாகும்.

இவருள் இந்திராதியர் சுவர்க்கலோக வாசிகள், பிரமா சத்தியலோகத் திலிருப்பவர், விஷ்ணு வைகுந்த லோகத்திலிருப்பவர். உருத்திரன் ஸ்ரீகண்டபுவனத்திலிருப்பவர். மகேஸ்வரன் ஈசுவர தத்துவத்தி லிருப்பவர். சதாசிவன் சாதாக்கிய தத்துவத்திலிருப்பவர். நிஷ்கள சிவத்துக்கு லயதத் துவமிடமாகும். ஞானாநந்த வஸ்துவாகிய சிவமோ தத்துவாதீதமாய் எங்க ணும் நீக்கமற நிறைந்து பரிபூரணமாய்ப் போக்குவரவின்றி விளங்குவது.

நாம் எந்தக் கடவுளை வணங்குகின்றோமோ அந்தக் கடவுளே நமக்குப் பிரயோசனத்தைத் தரும். அந்தக் கடவுளால் வரும் முடிந்த பிரயோசன மாவது, அந்தந்தக் கடவுள் வாழும் உலகத்தை அல்லது அதன் நிலையை யடைதலேயாம். இந்திராதியரை யாகாதி கருமங்களால் வழிபட்டோர் சுவர்க்கலோகத்தை யடைவர். பிரமாவை வழிபட்டோர் சத்தியலோக மடைவர். விஷ்ணுவை வழிபட்டோர் வைகுந்தம் புகுவர். உருத்திரனை வணங்கி னோர் ஸ்ரீ கண்டபுவனம் புகுவர். மகேஸ்வர சதாசிவர்களையும் நிஷ்களசிவத் தையும் வணங்கினோர் ஸ்ரீகண்ட புவனத்தின் மேலும் சுத்த வித்தைக்குக் கீழுள்ள பதமுத்தி நிலையங்களை யடைவர். ஞானாநந்த வஸ்துவாகிய சிவத்தை ஞானத்தால் வழிபட்டோர் அபரமுத்தி பரமுத்திகளை யடைவர்.

இனி, இவரின் வேறாய் இருவினையொப்பும் மலபரிபாகமும் சத்திநிபாதமும் பொருந்தப்பெற்றுக் குருவருளினாலே சைவ மார்க்கத்தினின்று சரியையனுஷ்டித்து உருத்திரனை வழிபட்டோர் மூலப்பிரகிருதிக்கு வேறாய்ச் சுத்தமாயா புவனங்களுள் ஒன்றான ஸ்ரீகண்ட புவனத்தை யடைந்து சிவபோகங்களை நுகர்வர். இவர் குருவருளினாலே மல நீங்கியும் வாசனாமல முடைமையால் இவ்வாறு புவனவாசிகளாவர்; பிரகிருதியுட்பட்ட உலகங்கள் பசு புண்ணிய கர்மங்களால் வருவன. மலமாயா கர்மங்களின் பேறாயிருத்தலால் அவை பந்தநிலையாகும். ஸ்ரீகண்ட புவனப்ராப்தி மலமாயா கர்மங்களினீங்கி நீங்கிச் சிவபுண்ணிய வசத்தால் வாசனாமலத்துக்கு இயைந்த சுத்த மாயா காரிய புவனப்பிராப்தியா யிருத்தலால் அது முத்திநிலையாமன்றிப் பந்த நிலையாக மாட்டாது. மலவாசனையும் சுத்தமாயா சம்பந்தமு மிருத்தலால், அது பதமுத்தியென்று சொல்லப்படும். பிரகிருதியுட் பட்டோர் சுதந்தா மின்றிக் கர்மாநுசாரமாய் அஞ்ஞான வசத்தராய் நடப்பர். பதமுத்தி யடைந்தோர் சுதந்தரராய் இச்சாநுசாரப்படி சிவபோகங்களை நுகர்வர். அவ்வேறுபாடே பிரகிருதி யுட்பட்டோர் பெத்த நிலையுடைய ரென்பதனையும் பதமுத்தியடைந்தோர் சிவபுண்ணிய வசத்தாற் சிவபோக நுகர்ந்து முன்னுடம்பு விடுங்காலத்துக் கொண்ட அவாவுக்கேற்ப இப்பூமியில் நற்குலத்தில் ஒரு பிறப்பெய்தி அந்த ஒரு பிறவியிற்றானே பரமுத்தியடைவர். கிரியையாளர்களும் யோகிகளும் ஸ்ரீகண்ட புவனத்தின்மேலும் சுத்த வித்தைக்குக் கீழுமுள்ள புவனங்களை யடைவர். இவருடைய பேறும் பதமுத்தியேயாம். இவரும் திரும்ப ஒரு பிறவியையடைந்து அப்பிறவியிற்றானே மேன்மேற் படிகளிலேறி ஞானத்தால் முத்தியடைவர்.

இவ்வாறு கடவுள் வழிபாடு என்பது ஒரு சொல்லிலடங்கினும் அதன் பேதத்தால் மிகவிரிந்து, பயனும் அவ்விரிவுக்கேற்ப வருவதாயிருக்கின்றது.

ஆகையால் முத்திநிலைக் கேதுவாய்ச் சைவசித்தாந்த வழியிற் சொல்லப் படுஞ் சொரூப சிவ வழிபாட்டைச்செய்து உண்மை முத்தியாகிய பரமுத்தியையடையும்படி முயல்வோமாக.

---

## திருக்கோவையாரில் கண்ட தலங்கள்

[C. M. இராமச்சந்திர செட்டியார், பி. ஏ., பி. எல்.]

திருக்கோவையார் கட்டளைக் கலித்துறையால் அமைந்த ஒரு அகப்பொருள் துறைநூலாய் இருந்தபோதிலும் ஆங்காங்கு சில தலப்பெயர்களையும் அத்தலச் சிறப்புகளையும் கூறுகிறபடியால், அதனாசிரியர் அத்தலங்களைத் தரிசித்து அவைகளின் மகிமைகளை உணர்ந்து பாராட்டும் நோக்கம் கொண்டிருந்தவராக இருத்தல் வேண்டும். அதனாசிரியராகும் மணிவாசகப் பெருமானார் தாம் அருளிய மற்றொரு அரும்பெரும் நூலாகிய திருவாசகத்தில் அநேக தலங்களைக் குறிப்பிட்டிருக்கின்றார். எனினும் திருக்கோவையாரில் நூலின் முதற்றலமாகிய தில்லையை விடுத்து வேறு தலங்களைக் குறிக்க

வேண்டிய அவசியம் இல்லை. அப்படி இருக்கும் இருபத்தொரு தலங்களின் பெயர்களை அந்நூலில் குறித்துள்ளார். அதனாலே அத்தலங்களை சிறிது அதிகப் பிரீதியோடு கொண்டாடினார் போலும். அத்தலங்களை எவ்வாறு கூறியுள்ளார் என்பதை அவர் தம்மேற்கோள்களையே ஒட்டி எழுதுவது இக்கட்டுரையின் நோக்கம்.

## 1. திருத்தில்லை.

இத்தலம் நூலுக்கு முதற்றலம். நூலுக்கே திருச்சிற்றம்பலக் கோவையார் என்ற சிறப்புப் பெயர் இருத்தலின் ஒவ்வொரு பாடலிலும் இத்தலப் பெயரைக் குறித்துள்ளார். இத்தலப் பெயரை, தில்லை என்று பெரும்பாலும் அம்பலம், சிற்றம்பலம், புலியூர் எனச் சிறுபாலும் கூறுகின்றார். புலியூர் என்ற பெயரை 44 செய்யுள்களில் கூறியிருக்கின்றனர். 72-ம் செய்யுளிலே மூவாயிரவர் தில்லையில் வணங்குவதைக் குறித்துள்ளார். தில்லை மூவாயிரவரை சைவ நூல்களிலே குறித்திருப்பதோடு, வைணவர்களிலும் குலசேகராழ்வார், மூவாயிரவர் கோவிந்தராஜப் பெருமாளை வணங்கினதாக அவர்தம் பெருமாள் திருமொழியில் கூறியுள்ளது நோக்கத்தக்கது. இனி, திருவாசகத்தில் கீர்த்தித் திருவகவல் முதலாக 25 பிரபந்தங்கள் மணிவாசகப் பெருமானார் தில்லையில் அருளிச் செய்ததாகக் கூறியிருப்பதைக் காண்கிறோம். தம்பிற்காலத்தைத் தில்லையிலேயே அப்பெருமான் கழித்தனர். ஆகையால் தில்லையைப்பற்றி அத்துணை அதிகமாகப் பாராட்டினது ஒரு வியப்பல்ல.

## 2. திருக்கயிலை.

இதனைக் கயிலாயம் என்றும் வழங்குவர். 23 திருப்பாடல்களில் இத்திவ்விய மலையைக் குறித்துப் பாராட்டியிருக்கின்றார். கைலையிலே பெருந்தேன் துளிகள் பெருகும் சாரல் (செ. 16) உண்டு. வளம் பொருந்திய மாஞ்சோலைகள் உண்டு (செ. 22) அது வடக்கே உள்ளது. (செ. 23) அங்கே சிறுமான்கள் உலாவும் (செ. 25) முத்துக்களைப்போல் பெரும் தேன் சொரிந்து விளக்கும் பொழில்கள் உள்ளன. (செ. 29) கைலையிலும் பைம்பூண் பெண்டிர்புனம் காப்பர் (செ. 30) அப்புனத்திற்கு அயலில் மணம் தங்கிய பொழிலின்கண் மடப்பிடிகள் பொருகரிகளோடு கூடிவிளையாடும் (செ. 34) அங்கே குறிஞ்சி நாட்டு ஆயத்தார் விளையாடுவார்கள் (செ. 37) அவர்கள் வசிக்கும் சீறூர்களும் உண்டு (செ. 54) ஒருகால் இலங்கையர்கோன் அம்மலையை எடுக்க அதன்கீழ் அவன் விழும் வண்ணம் சிற்றம்பலவர் செற்றார். (செ. 59) அம்மலையின்கண் புண்ணிய நீர் நிற்கும் சுனைகளில் மெல்லியலார் நீராடுவார். புனங்கள் மஞ்சு தோய்ந்திருக்கும் (328) இவை முதலான பல குறிப்புகளை எடுத்துக் கூறியிருக்கின்றார்கள். கைலைமலையானது சிவபெருமான் வாழும் திவ்விய மலையாதலின் இதனைப் பலவாறு வியந்தது ஒரு ஆச்சரியம் அல்ல. திருவாசகத்திலும் பல இடங்களில் அதனைப் புகழ்ந்திருக்கின்றனர். அப்பர், சுந்தரர் போன்று கைலையைத் தரிசிக்காததினாலே அதற்குத் தனிப்பதிகம் பாடினார் இல்லை போலும்.

### 3. திருமலயம்.

இதனை 7 செய்யுள்களில் மலயம் என்றும் 5 செய்யுள்களில் பொதியில் என்றும் கூறியிருக்கின்றனர். இது திருநெல்வேலி ஜில்லாவில் மேற்கில் உள்ள மலைத்தொடர். இங்கே பெருங்குன்றவானர் (மலைசர்) வசிப்பார்கள். (செ. 15) அவர்களுடைய பெண்மக்கள் புனம் காப்பார்கள். (செ. 68) அங்கு தினையை வித்திக் காத்து விளையை அறுத்து உண்பார்கள் (செ. 140) அங்கே சந்தனம் செழித்துத் தழை மலிந்து கிடக்கும் (செ. 91) தேனீக்களும், களி வண்டுகளும் மலர்களைக்குடையும். வேங்கையும், தினையும் விளையும் (செ. 139) அங்கு மலைசர் வாழும் பதிகள் விசும்புக்கு ஏணியிட்டதுபோல் சிறு நெறி (பாதை) இட்டதாய் மழை இடைவிடாது பெய்தலால் ஏறும்போது வழுக்கும் தன்மையுடையதாய் செல்வதற்கு அரிதாக இருக்கும். (செ. 149) மரம் அடர்ந்துளதாய்ப் பொழில்கள் இருண்டிருக்கும். (செ. 336) அதன் சாரல் களிலே சந்தன மரங்களும் மயில் தூங்கும் வேங்கை மரங்களும் உண்டு. மக்கள் சந்தனச் சாந்தை அணிந்து சுனையில் விளையும் காவிகளைச் சூடி வேங்கைப் பொழிலிலே இளைப்பாறுதல் உண்டு. (செ. 154) அங்கு யானைகள் உண்டு (செ. 394) இவை முதலான பல சிறப்புகளை ஆராய்ந்திருக்கின்றனர். திருவாசகத்தில் இதைப்பற்றிப் பதிகம் கிடையாது. திருக்கோவையார்அகப் பொருள்நூல் ஆதலின் தென்னாட்டில் மலயமானது ஒருசிறந்த மலையாகவும் தமிழ் பிறந்த இடமாகவும் இருந்ததாலும் இவ்வாறு சிறப்பித்துக் கூறினர் போலும்.

### 4. திருப்பரங் குன்று

இதனை 5 பாடல்களில் பாராட்டி இருக்கின்றனர். இது பெருமானர் தாம் வசித்த மதுரைக்கு மூன்றுமைல் தூரத்தில் உள்ள ஒரு புனிதத்தலம். மருத நிலத்தருகில் உள்ள குறிஞ்சி யாதலால் மிகச் சிறப்புடையது. இக்குன்றில் மலைபோலும் யானைகள் நடுங்க சிங்கங்கள் வேட்டந்திரியும் சீறூர் இருந்ததாம் (செ. 100) ஆகவே அக்காலத்தில் இம்மலைபொழில் அடர்ந்திருக்கலாம். அங்கே அருவிகள் பாய அதன் நீரால் புனத்தில் ஐவனம் விளைப்பார்கள். அதனைக் கொய்யும்போது அதன் தாளில் வாழும் கிளிகள் நட்பினால் ஓடாமல் அங்கேயே தங்கி நிற்கும். (செ. 144) அங்கே புனல் ஓடும் (செ. 292) காந்தள் மலரும் (செ. 229) அங்கு பரமனது புதல்வனாகும் முருகவேள் எழுந்தருளி இருப்பார். (செ. 178) இவை முதலான பொருள்கள் காண்கிறோம். இப்பரங்குன்று ஒரு பாடல்பெற்ற தலம். இதனைச் சம்பந்தரும், சுந்தரரும் இரு பதிகங்களால் பாடியுள்ளார்கள்.

மற்றும் இது திருமுருகன் படை வீடுகளில் ஒன்றாகும். இதனை அருணகிரிநாதர் திருப்புகழ்களால் வியந்துள்ளார்.

### 5. திருக்குற்றாலம்.

இதனை இரண்டு பாடல்களில் காண்கிறோம். குற்றாலத்தில் அழகிய அசோகப் பொழில் வாய்ந்த தடவரை உண்டு. அத்தலத்தில் குழல்வாய்

மொழி மங்கை என்ற திருநாமங்கொண்ட உமாதேவியின் பங்கர் இருப்பார். (செ, 94) இக்குற்றாலம் உம்பரால் ஏத்தப்படும் திருச்சிற்றம்பலத்தில் உள்ள எம் கூத்தனது நலமாகும் (செ. 135) என இத்தலம் பாராட்டப் பெற்றுள்ளது. இதில் ஈசன் பெயர் கூத்தன் எனவும், அம்மை பெயர் குழல்வாய்மொழி அம்மை எனவும் கண்டிருத்தல் நோக்குக. மணிவாசகனார் திருவாசகத்திலும் "குற்றாலத்திற் குறியாயிருந்து" என்றும், "குற்றாலத்தமர்ந்துறையும் கூத்தாவுன் குரைகழற்கே" என்றும் கூறியிருத்தல் காண்க. அப்பரும் திருவங்கமாலையில் "குற்றாலத்துறை கூத்தனல்லால் நமக்கு உற்றார் ஆர் உளர்" என்கிறார். பட்டினத்தாரும் "குற்றாலத்தானையே கூறு" என்கிறார். ஆகவே உயிர் உய்யவேண்டுமாகில் இறக்கும் தருவாயிலாவது குற்றாலத்துக் கூத்தனை நினைத்தல் ஐதிகம் எனத்தெரிகிறது. மேலும் இத்தலத்தைப்பற்றிச் சம்பந்தருடைய குற்றாலம் என்ற திருப்பதிகமும் குறும்பலா என்ற திருப்பதிகமும் உண்டு. இத்தலத்தைப்போல் தென்னாட்டில் அழகிய அருவிவாய்ந்த குன்றுகளின் தொடர் வேறுகிடையாது எனலாம்.

### 6. திருப்பூவணம்

இத்தலத்தைக் குறித்து இரண்டு பாடல்கள் திருக்கோவையாரில் உண்டு. இத்தலம் மதுரைக்குக் கிழக்கே பாண்டிநாட்டில் வைகை நதிக்கரையில் உள்ளது. சிவபெருமானது பூவணத்தைப் போன்ற பொன் (செ. 305) என்றும், சிவபிரானது பொன்னால் இயன்ற பெரிய மதிலால் சூழப்பட்ட பொழிலையுடைய திருப்பூவணத்தை ஒக்கும் பொன் (செ. 338) என்றும் கூறியுள்ளார். இதனால் பூவணம் சிவபெருமான் தலம் என்றும் அது பொன் போன்ற பெண்ணுக்கு உவமைப்பொருள் என்றும், அங்கு பெரிய மதிலும் பொழிலும் உண்டு என்றும் காணலாம். இப்பூவணம் பாண்டி பதினான்கு பாடல்பெற்ற தலங்களில் ஒன்று. இதனை மூவர்களும் நான்கு பதிகங்களால் பாடியுள்ளார்கள். திருவிசைப்பாவும் உண்டு. சுவாமிகள் தமது திருவாசகத்தில் "பூவணமதனில் பொலிந்திருந்தருளி" என்கிறார்.

### 7. கூடல்.

இதற்கு இரண்டு பாடல் உண்டு. கூடல் என்பது பாண்டி நாட்டுத் தலைநகரான மதுரை ஆகும். இங்கு மணிவாசகப் பெருமான் அமைச்சராக இருந்தார். இவர் பொருட்டு பல திருவிளையாடல்கள் நடந்தன. 'தில்லையிலும் என் மனதிலும் தங்கும் ஈசனது உயர்ந்த மதிலையுடைய கூடலின்கண் ஆய்ந்த இனிய தமிழின் துறைகள்' (செ. 20) எனக்கூறுகிறார். ஆகவே அது ஈசனது திருப்பதி என்றும் அங்கு இனிய தமிழ் ஆராயப்பெறும் என்பதும் பெறப்பட்டது. மதில்களும் அங்கு உண்டு, மிகவும் பிரக்யாதி யடைந்தவை. இவை முதலான பொருள்களைத் தெளிவாக உரைத்துள்ளார். (செ. 376) தென் கூடல் என எடுத்தாளுகிறார். ஆனால் திருவாசகத்தில் இத் தலத்திற்கு தனிப்பதிகம் கிடையாது. சில இடங்களில் மாத்திரம் குறிக்கப் பெற்றுள்ளது. இதற்குத் தேவாரப் பதிகங்கள் (11) உள்ளன.

(தொடரும்)

சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# உமாபதிசிவனார் திரட்டியருளிய அருள்முறைத் திரட்டு உரை

(மலர் ௬, இதழ் அ, 200-ம் பக்கத் தொடர்ச்சி)

ஊனினுளுயிரை வாட்டி யுணர்வினர்க் கெளிய ராகி
வானினுள் வானவர்க்கு மறியலா காத வஞ்சர்
நானெனிற் றானே யென்னு ஞானத்தார் பத்தர் நெஞ்சுள்
தேனுமின் னமுது மானார் திருச்செம்பொன் பள்ளி யாரே. ௬௬

(உரை) திருச்செம்பொன் பள்ளியார் - திருச்செம்பொன்பள்ளி என்ற தலத்தில் திருக்கோயில்கொண் டெழுந்தருளியிருக்கின்ற சிவபெருமான்; வானினுள் வானவர்க்கும் - தேவலோகத்தில் திருமால் அயன் முதலிய தேவர்களுக்கும்; அறியலாகாத வஞ்சர் - அறிதற்கு மிக அரியவரா யிருப்பினும்; ஊனினுள் உயிரை வாட்டி - உடம்பினில் நிலவுகின்ற உயிரைச் சீவபோதம் எழாதபடி அடங்கச் செய்து; நான் இல் தான் என்னும் - 'நான்' என்ற சீவபோதம் இல்லாத சிவபோதம் என்று கூறப்படுகின்ற; உணர்வினர் ஞானத்தார் பத்தருக்கு - உணர்வின உடையவர்களாகிய நினைப்பும் மறப்புமற்ற அயரா அறிவினையும் உயிர்ப்பற்றும் பொருட்பற்றும் அற்ற பேரன்பினையு முடைய அடியார்களுக்கு; எளியராகி - அவர்கள் தாமே என்னும்படி பேரருளினால் அவர்களோடு அத்துவிதமாய்க் கலந்திருக்கும் எளிமையை உடையவராகி; நெஞ்சுள் - அவர்களது நெஞ்சில்; தேனும் இன் அமுதும் ஆனார் - தேன்போன்றும் இனிய அமுதுபோன்றும் இன்பம் உணரச் செய்கின்ற பேரின்பப் பொருளா யிருக்கிறார்; ஆதலின், அடியார்களே! திருச்செம்பொன் பள்ளியில் திருக்கோயில்கொண் டெழுந்தருளி யிருக்கின்ற சிவபெருமானை வழிபட்டுப் பேரின்பம் அடைமின் என்பது குறிப்பெச்சம்.

(விளக்கம்) வானினுள் வானவர்க்கும் - உம் சிறப்பு உம்மை. அறியலாகாத வஞ்சர் - வஞ்சர் என்பது அரியவர் என்னும் பொருள்பட வந்தது. அடியார்களுக்கு எளியரா யிருத்தலும் ஏனையோர்களுக்கு அரியரா யிருத்தலும்பற்றி சிவபெருமான் வஞ்சர் என்று கூறப்பட்டார். இது இகழ்தல்போன்று புகழ்தல் ஆகும். ஊனினுள் உயிரை வாட்டி - ஊன் ஆகுபெயராய் உடலைக் குறிக்கிறது. வாட்டுதல் - வாடச்செய்தல்; மெலியச்செய்தல்; அதாவது சீவபோதத்தை அடங்கச்செய்தல். கோணலா யிருக்கிற இளமூங்கிற் கொம்பு ஒன்று தீயில் வாட்டி நேராக்கப்படுதல்போல, உலகை நோக்கித் திருகு சிந்தையை உடையதாயிருக்கிற உயிரை மெய்ஞ்ஞானத்தினாலே நேர்மையாக்கி இறைவனை நோக்கிச் செம்மையுடையதா யிருக்கும்படிசெய்தல் என்ற கருத்து வாட்டி என்ற சொல்லில் அடங்கியுள்ளது. நான் என் இல் தானே. ஆகி - என் - அசை. நான் - நான் என்ற (Iness); சீவபோதம்; தானேயிலுள்ள ஏ - அசை. பிரிநிலை எனினும் பொருந்தும். தான் என்ற சொல் சிவனைக் குறிக்கிறது. சிவபெருமான் அடியார் உயிர்கள்மேல் வைத்த பேரருளினால் அவர்கள் வேறு தான் வேறு என்று தோன்றாது தானே எனும்படி அவர்களைத் தனது திருவடி வியாபகத்துள் அடக்கி சீவபோதம் நீங்கிச் சிவபோத முடையவர்களாகச் செய்தல். "நானென வொன்று - இல்லென்று தானே யெனுமவரைத் தன்னடி வைத்து - இல்லென்று தானு மிறை" என்று கூறப்பட்ட ஞான நிலை இங்கே கூறப்பட்டது. உணர்வினர் ஞானத்தார் பத்தர் - ஞானத்தார் பத்தர் என்றதனால் முறையே அடியார்களுடைய அயரா அறிவு நிலையும் பேரன்பு நிலையும் கூறப்பட்டன. பதவுரையில் உரைநடை செய்ததுபோல் உரைநடை செய்க. எளியர் ஆகி - மேலே வஞ்சர் என்று கூறியதற்கு மறுதலைக்குணம் உடையவர்; எளியவர். எளிமை இன்னது என்பது மேலே கூறப்பட்டது. தேனும் இன் அமுதும் ஆனார் - தேனும் அமுதும் ஏகதேச உவமப்பொருள்களன்றி பேரின்பத்துக்குச் சிறிதும் ஈடாகாதவை. உலக அநுபவத்தில் வைத்துப் பேரின்பம் எத்தன்மையது என்று கூறப்படவேண்டுதலின், தேனும் இன்னமுதும் என்று அடிகள் உவமித்துக் கூறினார். மாணிக்கவாசகப் பெருமானும், "தேனாய் இன்னமுதமுமாய்த்தித்திக்கும் சிவபெருமான்" என்று கூறியருளினர் 'தேனும் இன்னமுது மானார்' என்பதனால் அடியார்களுக்குத்

அரியநிலைக்கண்ணதாகிய அருள் நிலையில் மலம் நீக்கத்தா லுண்டாவதாகிய இன்பத் தோற்றம் கூறப்பட்டது; இன்புறு நிலையின் கீழ்க் கூறப்படுவதாகிய அரியாதீத நிலைக் கண் சிவத்துவ விளக்கத்தா லுண்டாகும் பேரின்பத்துக்குத் தோற்றுவாய் செய்யப் பட்டதாயிற்று.

யாதே செய்து மியாமலோ நீயெனில்
ஆதே யேயு மளவில் பெருமையன்
மாதே வாகிய வாய்மூர் மருவினர்
போதே யென்று புகுந்ததும் பொய்கொலோ. ௪0

(உரை) யாது செய்தும் - அடியார்கள் உலகில் எந்தச் செயலைச் செய்தாலும்; யாம் அலோம் நீ என்னில் - அச்செயலை நீயே செய்வித்து நாங்கள் செய்தோமே அன்றி நாங்களாகச் செய்யவில்லை நீயே செய்தாய் என்று சிவபோதமின்றி அவர்கள் (மனநிலெண்ணி) வாயினாலே சொன்னால்; ஆதே எயும் அளவில் பெருமையன் - அந்தச் செயலைப் பொருந்தி அதனை தனது செயலாகக் கொள்ளும் அளவிட்டுக் கூற முடியாத பெருந்தன்மையை உடையவனும்; மாதேவு ஆகிய வாய்மூர் மருவினர் - தேவர்களுக்கெல்லாம் தேவனாகிய திருவாய்மூரில் எழுந்தருளி யிருக்கின்ற வனுமாகிய சிவபெருமான்; போது என்று புகுந்ததும் பொய்சொல் - ("வாய்மூரிலிருப்போம் தொடா,)வா" என்று சிவபெருமான் திருமறைக் காட்டில் என்துயிலின்கண் கூறிப் போந்தது பொய்யோ?

(விளக்கம்) இப்பாட்டு, திருநாவுக்கரசு அடிகள் திருஞானசம்பந்த அடிக ளுடன் திருமறைக் காட்டிலிருந்த காலத்தில் அத்தலத் திருக்கோயிற்கதவு தாம் பாடிய கடைசிப் பாட்டு முடிந்தபின் திறந்த அருமையையும் திருஞானசம்பந்த அடி கள் பாடிய முதற் பாட்டிலே திருக்கதவு அடைத்த எளிமையையும் நினைந்து நம்பர் திருவுளம் யாதோ எனக் கவன்று தாமிருந்த திருமடத்தில் துயில் கொள்ளும்பொழுது சிவபெருமான் அவர்துயிலின்கண் தோன்றி "யாம்வாய்மூரிலிருப்போம் தொடரவா". என்று கூறியருளினவுடனே அவாற் பாடப்பட்ட திருப்பதிகத்தின் ஆறுவது பாட்டு திருவாக்கின் கட்டளைப்படி திருநாவுக்கரசு அடிகள் திருவாய்மூருக்குச் சென்றார். சிவ பெருமானும் வந்தவர் முன்செல்ல அவரை நெடுந்தூரம் வரை பின் தொடர்ந்துபோய்க் காணுதிருந்தமையை இப்பாட்டினது நான்காவது அடி குறிப்பிடுகிறது. இந்நிகழ்ச்சிக் குப் பொருந்த நான்காவது அடிக்கு உரை கூறப்பட்டது. யாதே செய்தும் - ஏ - அசை. செய்தும் - இறந்த காலவினை யெச்சம்; யாம் அலோம் நீ எனில் - யாம் செய்தோம் அல்லோம் நீயே செய்தாய் என்னில் என விரியும்; அல்லோம், அலோம் எனவும் என் னில், எனில் எனவும் குறுகி வந்தன; என்னில் - என்று சொன்னால்; "புன் செயலி னூடும் புலன் செயல் போனின் செயலை மன்செயல தாகமதி" என்று திருவருட் பயனிற் கூறப்பட்டபடி அடியார்கள் தங்கள் செயலை இறைவனது கிரியா சத்தி நடத் தும் செயலாகக் கருதுதல் கூறப்பட்டது. "யான் செய்தேன் பிறர் செய்தார் என்னு மிக்கோளை" என்ற சிவஞான சித்தியார் ௬0-வது சூத்திரப் பாட்டின் கருத்து மிதுவே. "என் செயலாவ தியாதொன்று மில்லை இனித் தெய்வமே உன் செயலே" யென்று உணரப்பெறும் ஞானியினுடைய நிலை இது; ஆதே எயும் அளவில் பெருமை யன் - அது என்பது எதுகை நோக்கி ஆது என நீண்டது. நீட்டல் விகாரம் ஏ - பிரி நிலைப் பொருளில் வந்தது; எய்தல் - பொருந்தல் - தன் செயலாகக் கொள்ளுதல் அடி யார்கள் சிவபோதமின்றிச் செய்யும் செயலைச் சிவபெருமான் தனது செயலாகக் கொண்டு பேரருளினால் அவர்களுக்குத் தன்னையுமளித்து முன்னிற்பன் ஆதலின் அடி கள் "அளவில் பெருமையன்" என்று கூறியருளினர். "நஞ்செயலற்றிந்த நாமற்ற பின்னாதன் - தன் செயலுனே யென்றுந் தீபற - தன்னையே தந்தானென்றுந் தீபற"

என்று திருவுந்தியாரிற் கூறப்பட்டிருத்தல் காண்க. ; போதே என்று புகுந்ததும் பொய் கொலோ - போதே என்பதில் ஏ அசை ; பொது - வா - கொல் - அசை ; ஓ - வினாப் பொருளைத் தருகின்றது.

நிலனொடு வானுநீரொடுதீ யும்வாயுவுமாகி யோரைந்து
புலனொடுவென்று பொய்ம்மைகள் தீர்த்த புண்ணியர் வெண்பொடிப்பூசி
நலனொடு தீங்குந் தானலதின்றி நன்கெழு சிந்தையராகி
மலனொடுமாசு மில்லவர் வாழுமல்கு பெருந்துறையாரே. ௭௧

(உரை) நிலனொடுவானும் நீரொடுதீயும் வாயுவும் ஆகி - நிலம் வான் நீர் தீ காற்று ஆகிய ஐம்பெரும் பூதங்கள் (கதிரோன் திங்கள் உயிர்) ஆகிய எட்டுப் பொருள்களின் வடிவுடையவனாகி ; ஓர் ஐந்து புலனொடும் வென்று - மெய் வாய் கண் மூக்கு செவி என்ற ஐந்து ஞானேந்திரியங்களையும் (தன்மாத்திரைகள் கன்மேந்திரியங்கள் அந்தக் கரணங்களுடன்) உலக விடயப் பொருள்களிற் செல்லாதபடி அவைகளை அடக்கி வென்று ; பொய்மைகள் தீர்த்த புண்ணியர் - துவந்துவத் தன்மையைப் பொருந்தியிருக்கிற உலகிலுள்ள எல்லாப் பொய்ம்மைகளையும் நீங்கின அறவாளர் (யார் என்னில்) வெண்பொடிப்பூசி - வெண்மையான திருநீற்றைத்தரித்து ; தான் அலது நன்கொடு தீங்கும் இன்றி - சிவபெருமானுடைய அருட்டன்மையல்லாமல் உலகிலுள்ள நன்மை தீமைகளாகிய துவந்துவங்களில்லாதவராகி; நன்கு எழுசிந்தையர் ஆகி - நன்மையையே உயிர்களுக்குச் செய்யும் உள்ளத்தினை உடையவராகி; மலனொடுமாசும் இல்லவர் - ஆணவம் வினைமாயை என்ற மும்மலங்களும் அவைகளால் வரும் குற்றங்களும் நீங்கின அடியார்கள் ; வாழும் - வசிக்கின்ற; மல்கு பெருந்துறையாரே - (அருள்) நிறைந்துள்ள திருப்பெருந்துறை என்னும் தலத்தில் திருக்கோயில் கொண்டிருக்கிற சிவபெருமான் - ஆதலின், அடியார்களே ! அவரை அடைந்து வழிபடுங்கள் என்பது குறிப்பெச்சம்.

(விளக்கம்) நிலனொடுவானும் நீரொடுதீயும் வாயுவும் ஆகி - இனம்பற்றிக் கதிரோன் திங்கள் உயிர் ஆகிய இவைகளும் சேர்த்து உரையிற் கூறப்பட்டன. சிவபெருமானுடைய அட்டமூர்த்தி வடிவங் கூறப்பட்டது. ஒடு - இங்கே எண்ணுப் பொருளில் வந்தது ; ஓர் ஐந்து புலனொடுவென்று - ஒடு என்பதனால் தன் மாத்திரைகள் கன்மேந்திரியங்கள் அந்தக் கரணங்களும் குறிப்பிடப்பட்டன. சிவபெருமான் உயிரினது இந்திரியங்கள் அந்தக் கரணங்கள் முதலியவற்றோடு சேர்ந்திருந்தாலும் அவைகளை விட்டு நீங்கின தன் வயமுள்ளவர் என்பது கூறப்பட்டது. பொய்மைகள் தீர்த்த புண்ணியா - சிவபெருமான் மாயா தத்துவங்களாலாகிய உலகில் நிறைந்திருந்தாலும் மாயாதத்துவங்களுக்கு உரிய துவந்துவத்தன்மையினின்று நீங்கியவர் என்பது கூறப்பட்டது. துவந்துவத்தன்மை திரோத மலத்தால் உயிர்களுக்கு உண்டாவது. ஆண் பெண், நன்மை, தீமை, வெம்மை தண்மை, இரவு பகல், இருள் ஒளி, முதலியனவாகிய துவந்துவங்கள் (இருகூறான தன்மைகள்) உலகில் உள்ள பொய்மைகள் ஆகும் (unrealities) புண்ணியர் அருள்மயமாகிய அறவடிவினை யுடையவர். "என்புள்ளுருக்கி இருவினையை ஈடழித்துத்-துன்பங்களைந்து துவந் துவங்கள் தூய்மை செய்து" என்று மாணிக்கவாசக அடிகள் திருவாசகத்திற் கூறியிருத்தல் காண்க. வெண்பொடிப்பூசி-வெண்ணிறநீறு அடியார்களுடைய புறத்தூய்மையுடன் அகத்தூய்மையையுங் குறிக்கிறது. தான் அலது நலனொடு தீங்கும் இன்றி - தான் என்பது இங்கே சிவபெருமானை அதாவது அவரினின்றும் வேறுபடாத சிவபெருமானது அருட்டன்மையைக் குறிக்கிறது - தத் என்ற வடமொழிச்சொல் பிரமப் பொருளைக் குறிக்க, வேதங்களில் வழங்கப்பட்டு வந்திருத்தல்போல, தான் என்ற சொல் தமிழ்மறையாகிய தேவார திருவாசகங்களில் சிவப்பொருளைக்குறிக்க வழங்கப்படுகின்றது. "தானெனைமுன்படைத்தான்" என்ற சுந்தரமூர்த்தி அடிகளுடைய

திருக்கொடித்தான் மலைத்தேவாரத்தில் சிவபெருமானைக் குறிக்க வழங்கப்பட்டிருத்தல் காண்க. நலமும் நீங்கும் உலகிலுள்ள துவந்துவத்தன்மையைக் குறிக்கிறது. பொய்மைகள் தீர்த்தபுண்ணியர் என்று இரண்டாவது அடியில் சிவபெருமானுக்குக் கூறப்பட்டது, நலனொடு நீங்கும் தானல தின்றி என்பது மூன்றாவது அடியில் அடியார்களுக்குக் கூறப்பட்டது. நன்கு எழு சிந்தையர்-அடியார்கள் உலகத் துவந்துவங்களினின்று நீங்கி அருட்டன்மைநிறைந்திருக்கிறவர்கள் ஆதலின் அவர்களுடைய தூய சிந்தையில் நலம் ஒன்றே எழும். மலனொடு மாசும் இல்லவர் - இரண்டாவது அடியில் புண்ணியர் என்று சிவபெருமானுக்குக்கூறப்பட்டது. நான்காவது அடியில் மலனொடுமாசுமில்லவர் என்பது அடியார்களுக்குக் கூறப்பட்டது. "தானெனுக்குந் தன்னடியவர்" என்று திருநாவுக்கரசு அடிகள் திருவெண்காடு தேவாரப் பதிகம் 3-வது பாட்டிற் கூறியருளியது காண்க. இங்கேயும் தான் என்பது சிவபெருமானைக் குறிக்கிறது. புண்ணியர் - எழுவாய். பெருந்துறையார் - பயனிலை. இந்தப் பாட்டில் 'நிலனொடு' என்பது முதல் 'புண்ணியர்' முடிய சிவபெருமானுடைய பெருமையும் "வெண்பொடிப் பூசி" என்பது முதல் இல்லவர் முடிய அடியார்களுடைய பெருமையும் கூறப்பட்டன.

ஒப்பாயிவ் வுலகத்தோ டொட்டி வாழ்வான்
ஒன்றலாத் தவத்தாரோ டுடனே நின்று
துப்பாருங் குறையடிசி றுற்றி நற்றுன்
றிறமறந்து திரிவேனைக் காத்து நீவந்
தெப்பாலு நன்றுணர்வே யாக்கி யென்னை
யாண்டவனே யெழிலானைக் காவா வானோர்
அப்பாவுன் பொற்பாத மடையப் பெற்றால்
அல்லகண்டங் கொண்டடியே னென்செய் கேனே. ௭௨

(உரை) எழில் ஆனைக்காவா - அழகுபொருந்திய திருவானைக்காவில் திருக்கோயில் கொண்டிருக்கிறவனே ; வானோர் அப்பா - தேவர்களுடைய தலைவனே ; இவ்வுலகத்தொடு ஒப்பாய - இந்த உலகத்திலுள்ள மக்களுக்குச் சமானமாய் ; ஒட்டி வாழ்வான் - அவர்களோடு இணங்கி வாழும்பொருட்டு ; ஒன்றலாத் தவத்தாரோடு உடனே நின்று - நல்ல தவத்தோடு ஒன்றாகவைத் தெண்ணத்தகாத தவம் செய்கின்ற சமணர்களோடு கூட நின்று ; துப்பு ஆரும் குறை அடிசில் துற்றி - நெய் பொருந்திய பிச்சைச் சோற்றினை உண்டு; நல் உன் திறம் மறந்து திரிவேனை - உயிர்களுக்கு எப்பொழுதும் நன்மையையே செய்கின்ற உனது அருள் வலியை மறந்து உழல்கின்றவனாகிய என்னை ; நீ வந்து - நான் உன்னை வேண்டாதிருக்க நீயே என்னிடம் வந்து ; எப்பாலும் நன் உணர்வே ஆக்கி - எந்த இடம் பார்த்தாலும் நான் உன்னையே உணரும்படியான மெய்யுணர்வு உடையவனாகச் செய்து ; என்னை ஆண்டு காத்தவனே - என்னை உன் அடிமையாக ஆட்கொண்டருளிக் காத்தவனே ; உன் பொற்பாதம் அடையப்பெற்றால் - ஆண்டவனாகிய உனது அழகிய இரண்டு திருவடிகளையும் நான் சேரப்பெற்றால் ; அல்லகண்டம் கொண்டு - துன்பத்துக்கு இடமாயிருக்கிற உடலினால் ; என் செய்கேன் - என்ன பயனை அடைவேன் ; (ஒரு பயனுமில்லை என்றபடி).

(விளக்கம்) இவ்வுலகத்தோடு ஒப்பாய் ஒட்டி வாழ்வான் - திருநாவுக்கரசு அடிகள் தாம் சமண சமயத்தை மேற்கொண்டிருந்த காலத்தில் சமணத் துறவிகளைப்போல அவர்களோடு சேர்ந்து ஒழுகினதைக் கூறுகின்றார். ஒன்றலாத் தவத்தார் - தவம் என்று கூறிப் பாயுடுத்துத் தலைபறித்து நின்றுண்ணும் சமணர்கள் அவச்செயல்களைச் செய்கின்றவர்கள் ஆதலின், அவர்களை அடிகள் 'ஒன்றலாத் தவத்தார்' என்றார். ஒன்றலாத் தவம் என்பதற்கு இறைவனோடு சேர்தலைச் 'செய்யாத் தவம்' என்று கூறினும்

பொருந்தும். குறை அடிசில் - பிச்சைச் சோறு ஆதலின், குறை அடிசில் என்றார். குறை - தவறு. நற்றுன் திறம் - நல்+அ+உன் - நற்றுன் ; அ சாரியை. நன்மை. அ உடன் சேரும்பொழுது நல் என நின்றது. திறம் - அருட்டிறம். என்னை ஆண்டு காத்தவனே - என்னைக் காத்து ஆண்டவனே என்பதை என்னை ஆண்டு காத்தவனே என மாறுக. உன் பொற்பாதம் அடையப்பெற்றுல் அல்லகண்டங் கொண்டு அடியேன் என் செய்கேன் - இதற்கு, மேலே 31-வது பாட்டின் கீழ் எழுதப்பட்ட விளக்க உரைகளைக் கொள்க.

கார்க்குன்ற மழையாய்ப் பொழிவானை கலைக்கெலாம் பொருளாயுடன்கூடிப்
பார்க்கின்ற வுயிர்க்குப் பரிந்தானைப் பகலுங்கங்குலு மாகிநின்றுனை
ஓர்க்கின்ற செவியைச் சுவைதன்னை யுணருநாவினைக் காண்கின்றகண்ணை
ஆர்க்கின்ற கடலைமலை தன்னை யாரூரானை மறக்கலுமாமே. எ௩

(உரை) கார்க்குன்றம் மழையாய்ப் பொழிவானை - கார்காலத்தில் மலைமேல் மழை பொழிதல் போல் உயிர்களிடத்துத் தனது அருளைப் பொழிந்து விளங்கச் செய்கிறவனும் ; கலைக்கெலாம் பொருளாய் - தான் வேதாகமங்கள் முதலிய பல கலைகளிலும் கூறப்பட்ட பொருளாயிருந்தும் ; உடன்கூடிப் பார்க்கின்ற உயிர்க்குப் பரிந்தானை-தன்னுேடு கூடியிருந்து தன்னை அறியாது பார்க்கின்ற உயிரினுடைய அறியாமை நிலைக்கு இரங்குகின்றவனும் ; பகலும் கங்குலும் ஆகி நின்றுனை - பகலும் இரவுமாகிய காலமாகி நிற்கிறவனும் ; ஓர்க்கின்ற செவியை - (பெரியார் கூறுகிற, உண்மைகளைச் செவிகளாற் கூர்ந்து கேட்கின்ற கேள்வி அறிவா யிருக்கின்றவனும் ; சுவை தன்னை - நாவினுற் சுவைத்து அறிகிற சுவையாயிருக்கிறவனும் ; உணரும் நாவினை - அச்சுவையை உணர்கின்ற நாவாயிருக்கிறவனும் ; காண்கின்ற கண்ணை - புறவிடயப் பொருளைப் பார்க்கின்ற கண்ணு யிருக்கிறவனும், ஆர்க்கின்ற கடலை - ஒலிக்கின்ற கடலாயிருக்கிறவனும் ; மலை தன்னை ஆரூரானை - மலையாயிருக்கிறவனும் திருவாரூரில் திருக்கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கிறவனும் ஆகிய புற்றிடங்கொண்ட பெருமானை ; மறக்கலுமாமே - மறக்க முடியுமோ (மறக்க முடியாது என்றபடி.)

(விளக்கம்) கார்க்குன்றம் மழையாய்ப் பொழிவானை - ஆய் - உவமப் பொருளில் வந்தது ; கலைக்கெலாம் பொருளாய் உடன் பார்க்கின்ற உயிர்க்குப் பரிந்தானை - கலைகள் கூறப்பட்டிருந்தும் அவைகளை மக்கள் ஓதி இறைவனை அறியாமலிருக்கிற அறியாமை நிலைக்கு இறைவன் இரங்கி வருந்துகின்ற பெருங்கருணைத்திறம் கூறப்பட்டது ; பகலும் கங்குலுமாகி நின்றுனை - இறைவன் காலதத்தவத்திற் கலந்து அதனை இயக்குதல் கூறப்பட்டது. செவி சுவை நா கண் என்பவைகளுக்கும் அவ்வாறே கொள்க ; ஓர்க்கின்ற செவியை - ஓர்தல் - கூர்ந்து கேட்டல் ; செவி என்பது இங்கே ஆகு பெயராய்க் கேள்வி அறிவைக் குறிக்கிறது ; செவிச் செல்வம் என்பது திருக்குறளில் கேள்விச் செல்வம் என்று பொருள் படுதல் காண்க. ; மறக்கலுமாமே - ஏ - வினுவாய் எதிர்மறைப் பொருள் தந்து நின்றது மறக்கமுடியாது என்பது பொருள். "தன்னை அறிவித்துத் தான்தானுச் செய்தானைப் - பின்னை மறத்தல் பிழை" ஆகும் என்பது கருத்து. மறக்கலுமாமே என்பதனுல் இறைவன் சிவபோத மிறந்து நின்ற ஆன்மாவைத் தனது திருவடி வியாபகத்துள் அடக்கித் தன்னை மறவா வண்ணம் அதனைத் தானுகச் செய்தல் கூறப்பட்டது.

ஆக்குமழிவுமமைவு நீயென்பன்நான் சொல்லுவார்
சொற்பொரு ளவைநீ யென்பன்நான்
நாக்குஞ் செவியுங்கண்ணும் நீயென்பன்நான்
நலனே யினிநானுனை நன்குணர்ந்தேன்

நோக்கு நிதியம்பல வெத்தனையுங்
கலத்திற் புகப்பெய்து கொண்டேற நுந்தி
ஆர்க்குங் கடலங்கரை மேல்மகோதை
அணியார் பொழிலஞ்சைக் களத்தப்பனே. ௭௪

(உரை) நோக்கும் நிதியம் பல எத்தனையும் - (வணிகர்கள் பல இடங்களிற்) காண்கின்ற மிக்க பல பண்டங்களையும்; கலத்திற் புகப்பெய்து கொண்டு - கப்பல்களிற் பொருந்தும்படி கொணர்ந்து போட்டு; ஆர்க்கும் அம் கடல் கரை ஏற நுந்தி - அக்கப்பல்களை அழகிய கடற்கரைக்குக் கொண்டு போய்ப் (பண்டங்களை இறக்குதலால் மிக்க பொருள் வளமுடைய); மேல் மகோதை - அக்கரை மேலுள்ள மகோதை நகருக்கு அருகிலிருக்கும்; அணியார் பொழில் அஞ்சைக்களத்து அப்பனே - அழகு பொருந்திய சோலைகள் சூழ்ந்த திருவஞ்சைக் களத்தில் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் எனது தந்தையாகிய சிவபெருமானே; நான் நீ ஆக்கும் அழிவும் அமைவும் என்பன் - நான் உன்னை நீ படைக்கும் கடவுள் என்றும் (காக்கும் கடவுள் என்றும்) அழிக்கும் கடவுள் என்றும் பரிபூரணப் பொருள் என்றும் சொல்லித் துதிப்பேன்; நான் நீ சொல்லுவார் சொற்பொருளவை என்பன் - நான் உன்னை நீ, சொல்லுகிறவர்களுடைய சொற்களிலடங்கிய பொருள்களாயிருக்கிறாய் என்று சொல்லித் துதிப்பேன். நான் நீ நாக்கும் செவியும் கண்ணும் என்பன் - நான் உன்னை நீ உயிர்கள் சுவை அறிகிற நாக்காயும் கேட்கிற செவிகளாயும் பார்க்கிற கண்களாயுமிருக்கிறாய் என்று சொல்லித் துதிப்பேன். நலனே - எல்லா உயிர்களுக்கும் நன்மையையே கருதிச் செய்கிறவனே; இனி நான் உனை நன்கு உணர்ந்தேன் - உன்னால் ஆட்கொள்ளப் பெற்றபின் நான் உன்னை எல்லா உயிர்களுக்கும் பேரின்பம் அளிக்கிற பொருளாயிருக்கிறவன் என்று எனது உள்ளத்தில் தெளிவாக உணர்ந்தேன். ஆதலின் அடியார்களே! நீங்கள் திருவஞ்சைக்களத்துச் சிவபெருமானை வழிபட்டுப் பேரின்பம் அடைமின் என்பது குறிப்பெச்சம்.

இப்பாட்டின் பின் இரண்டு அடிகளும் மகோதை நகரினது கப்பற் பொருள் வளத்தைக் கூறுகிறது. நான் நீ ஆக்கும் அழிவும் அமைவும் என்பன் - ஆக்கு-முதல்நிலைத் தொழிற்பெயர். ஆக்குதல் படைத்தல்; அது இங்கே ஆகுபெயராய்ப் படைக்கும் கடவுளைக் குறிக்கிறது. அவ்வாறே அழிவு அழிக்குங் கடவுளைக் குறிக்கிறது. இனம்பற்றிக் காக்கும் கடவுளும் சேர்த்து உரையிற் கூறப்பட்டது: அமைவு - நிறைவு, பரிபூரணம் (Fulness) அது இங்கே பரிபூரணப் பொருளைக் குறிக்கிறது. சொற்பொருள் அவை - அவை பகுதிப்பொருள் விகுதி; பொருள் அவை ஒருமைப் பன்மை மயக்கம்; நான் நீ நாக்கும் செவியும் கண்ணும் என்பன் - நாக்குச் செவிகள் கண்களில் இறைவன் இல்லாவிடின் அவைகளியங்கா ஆதலின் அவ்வாறு கூறினார். நலனே - நலன் என்ற சொல் நலம் என்பதன் போலி; இறைவன் எல்லா உயிர்களுக்கும் நன்மை செய்கிறவன் ஆதலின் அவனை அடிகள் நலனே என்றார். "நன்றுடையான் தீயதில்லான்" என்று இறைவனைத் திருஞானசம்பந்த அடிகள் கூறி அருளினர். நன்கு உணர்ந்தேன் - உணர்தல் - அழுந்தி அறிதல், உள்ளத்தில் சுவாநுபூதியில் உணர்தல். நன்கு உணர்ந்தேன் - உயிர் மலத்தினின்றும் நீங்கி அருள் ஒளி விளக்கம் அடைந்து இன்புறுதலை சுந்தரமூர்த்தி அடிகள் தமது சுவாநுபூதியில் வைத்து இப்பாட்டிற் கூறினார்.

## அ. இன்புறு நிலை

அளைவாயி லரவசைத்த வழகன் றன்னை
    ஆதரிக்கு மடியவர்கட் கன்பே யென்றும்
விளைவானை மெய்ஞ்ஞானப் பொருளா னானை
    வித்தகனை யெத்தனையும் பத்தர் பத்திக்
குளைவானை யல்லாதார்க் குளையா தானை
    உலப்பிலியை யுள்புக்கென் மனத்து மாசு
கிளைவானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக்
    கேடிலியை நாடுமவர் கேடி லாரே. எரு

**(உரை)** அளைவாயில் அரவு அசைத்த அழகன் தன்னை - புற்றினிடத்து உளதாகிய பாம்பைத் (தனது உடல்மேல் வைத்து) அசைக்கின்ற அழகனும்; ஆதரிக்கும் அடியவர்கட்கு - தன்னை அன்பினால் வழிபடும் அடியார்களுடைய; என்றும் அன்பே விளைவானை - (உள்ளத்தில்) எப்பொழுதும் அன்பாகத் தோன்றி அவ்வன்பாக மேலும் மேலும் முதிர்ந்து விளங்குகின்றவனும்; மெஞ்ஞானப் பொருளானை - அடியார்களுடைய மெய்யறிவில் விளங்கும் உண்மைப்பொருளா யிருப்பவனும்; வித்தகனை - அறிவுவடிவா யிருக்கிறவனும்; பத்தர் பத்திக்கு எத்தனையும் உளவானை - அடியார்களுடைய அன்புக்கு எவ்வளவாயினும் ஈடுபட்டு (அவர்களுக்கு வேண்டுவன செய்கிறவனும்); அல்லாதார்க்கு உளையாதானை - அடியாரல்லாதவர்களுக்கு அவ்வாறு ஈடுபடாமலிருக்கிறவனும்; உலப்பிலியை - அழிவின்றி நித்தியமா யிருக்கிறவனும்; என் மனத்து உள்புக்கு மாசு கிளைவானை - எனது உள்ளத்தினுள்ளே புகுந்து அதிலுள்ள குற்றங்களை நீக்குகிறவனும்; கீழ்வேளூர் ஆளும் கோவை - திருக்கீழ்வேளூர்த் தலத்தில் திருக்கோயில்கொண் டெழுந்தருளி அங்கேயுள்ள உயிர்களை ஆண்டருள் செய்கின்ற தலைவனும் ஆகிய சிவபெருமானை; நாடுமவர் கேடு இலார் - தங்கள் மெய்யறிவினால் நாடித் தேடிக் கண்டவர்கள் அவனோடு அத்துவிதமாய்க் கலந்து பிறப்பிறப்பு இல்லாதவர்களாய் நிலையான பேரின்பம் நுகர்ந்துகொண் டிருப்பர்.

**(விளக்கம்)** வாயில் - வாய் இல் என்ற இரண்டும் ஏழாம் வேற்றுமை உருபுகள். அது ஒரு சொல்லாகக் கொள்ளப்பட்டால் துவாரம் என்று பொருள்படும். அழகன் தன்னை - இந்தச் சொல்லிலடங்கிய பொருளை விரிவாய் அறிதற்கு செந்தமிழ்ச் செல்வி சிலம்பு 8 பரல் 12 பக்கம் 725 முதல் 730 வரை பார்க்க. தன் - அசை. அன்பே விளைவானை - விளைதல் என்பது பயிர் விளைந்து முதிருதல்போல மேலும் மேலும் முதிர்ந்து முறுகுதல் - அன்பே விளைவானை. அன்பாகவே விளைவானை, ஏ தேற்றப் பொருளில் வந்தது - சிவமே அன்பாதலின் அடிகள் அன்பே விளைவானை என்றார்; மெய்ஞ்ஞானப் பொருளானை - சிவமானது பசு ஞானம் பாச ஞானங்களால் அறியப்படாத பொருளாய் பதிஞானம் ஆகிய மெய்யறிவினாலே மாத்திரம் அறியப்படுகின்ற பொருளாயிருத்தலின் மெய்ஞ்ஞானப் பொருளானை என்றார்; பத்தர் பத்திக்கு எத்தனையும் உளவானை - உளைதல் ஈடுபடுதல் (Responding) ஈடுபடுதலுக்கு அளவில்லை யாதலின் எத்தனையும் உளவானை என்றார் "நின்மெய்யடியார் மனக்கருத்தை முடித்திடுங் குன்றமே" என்று சேந்தனார் திருவாவடுதுறை திருவிசைப்பாவிற் கூறியருளினமை காண்க.; என் மனத்து உள்புக்கு மாசு கிளைவானை -

ளிதல் - என்பது இனறி வெளிப்படுத்துதல்; மனக்குற்றங்கள் முற்றிலும் நீங்காத அடியார்கள் இவனது திருவடிகளைச் சேர முடியாது ஆதலின் அவன் அவர்களுடைய மனக்குற்றங்களை நினைந்து நீக்கி ஆட்கொள்ளுவான் என்பார் மனத்து மாசு களைவானை என்றார்; நாடுமவர் கேடிலார் - நாடுதல் இனம்பற்றி மேலே 60-வது பாட்டிற் கூறப் பட்ட தேடுதலும் காணுதலும் கூறப்பட்டன. நாடுதலுக்கு அப்பாட்டின்கீழ் எழுதப் பட்ட விளக்க உரை கொள்க. இறைவனது திருவடிகளை அடைந்த அடியார்கள் "கேடுங் திருவுங் கெட்ட திருவினர்" என்று சேக்கிழார் பெரிய புராணத்திற் கூறி யிருத்தல் காண்க. பிறப்பு இறப்புகள் ஆகிய கேடில்லாமல் நித்தியமாயுள்ள சிவபெரு மானை அடைந்த அடியார்கள் பிறப்பு இறப்பு இல்லாமல் நித்தியமாயுள்ள பேரின்பம் நுகர்ந்து வாழ்வர் என்பது இத்தேவாரத்திற் கூறப்பட்டது.

உருகு மனத்தடிய வர்கட் கூறுந்தேனை
உம்பர்மணி முடிக்கணியை உண்மைநின்ற
பெருகு நிலைக்குறி யாளரறிவு தன்னைப்பேணிய
அந்தணர்க்கு மறைப்பொருளைப் பின்னும்
முருகுவிரி நறுமலர்மே லயற்கும்மாற்கு முழுமுதலை
மெய்த்த வத்தோர் துணையை வாய்த்த
திருகுகுழ லுமைநங்கை பங்கன் தன்னைச்
செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே. ௭௬

(உரை) உருகு மனத்து அடியவர்கட்கு ஊறும் தேனை - (தங்களுடன் சிவபெரு மான் அத்துவிதமாய்க் கலந்து நின்று உலக விடயப் பொருளை அறிவித்தும் விடயப் பொருளுடனும் கலந்து நின்று அதனை அநுபவிக்கும்படி அறிந்தும் வருகிற பேருப காரங்களை) நினைந்து உருகுகின்ற உள்ளத்தையுடைய அடியார்களுக்கு அவர்கள் நினைக்க நினைக்க மேலும் மேலும் தேன் போன்று தித்திக்கும் இன்பப் பொருளாயிருக் கிறவனும்; உம்பர்மணி முடிக்கு அணியை - தேவர்களுடைய நவமணிகளாலாகிய முடிக்கு அலங்காரமாயிருக்கிறவனும்; உண்மை நின்ற - உண்மையைப் பின்பற்றுதலில் பிறிது தளராது நிலைத்து நிற்கிற; பெருகு நிலைக்குறியாளர் அறிவு தன்னை - மேலும் மேலும் வளர்ந்து வரும் மன நிலையைக் குறியாகக் கொண்டொழுகுகின்ற அடியார் களுடைய உள்ளத்தில் அறிவாக விளங்குகிறவனும்; பேணிய அந்தணர்க்கு மறைப் பொருளை - வேதாகமங்களை உண்மை அன்புடன் ஓதி அறிகின்ற அந்தணர்களுக்கு அம்மறைகளின் கண் விளங்கித் தோன்றுகிற பொருளாயிருக்கிறவனும்; பின்னும் - அதுவன்றி; முருகு விரி நறுமலர்மேல் அயற்கும் மாற்கும் - மணத்துடன் கூடி விரிந் திருக்கிற தாமரை மலர்மேலுள்ள பிரமதேவனுக்கும் திருமாலுக்கும்; முழு முதலை - முழு முதற் கடவுளாயிருக்கிறவனும்; மெய்த்தவத்தோர் துணையை - உண்மைத்தவம் செய்கின்ற அடியார்களுக்குத் துணையாயிருக்கிறவனும்; திருகுவாய்த்த குழல் உமை நங்கை பங்கன் தன்னை - முறுக்குப் பொருந்தியுள்ள கூந்தலையுடைய உமாதேவி யாரை இடது பாகத்தில் வைத்திருக்கிறவனும் ஆகிய சிவபெருமானை; செங்காட்டங் குடியதனில் - திருச்செங்காட்டங்குடி என்னும் தலத்தில் (திருக்கோயில் கொண் டெழுந்தருளியிருத்தலை); நான் கண்டேன் - நான் (அகக்கண்ணாலும்) கண்டு பேரின்ப முற்றேன்.